# மனக் குகை

(நாடகம்)

★

பெ. தூரன்

★

விற்பனை உரிமை:

பாரி நிலையம்

59, பிராட்வே, :: சென்னை - 1

# முன்னுரை

மனத்தின் சக்தியால் மனிதன் எத்தனையோ அரிய செயல்களைச் சாதித்திருக்கிறான். இயற்கையின் இரகசியங்களை அறிந்துகொள்வதற்கும், இயற்கையை வென்று அதன் மேல் பெரியதோரளவிற்கு ஆதிக்கஞ் செலுத்துவதற்கும் மனம் உதவி யிருக்கிறது. ஆனால், அந்த மனத்தின் இரகசியத்தை மட்டும் நம்மால் பூரணமாக அறிந்துகொள்ள முடியவில்லை. அதை வென்று அதன்மேல் முழு ஆதிக்கம் செலுத்துவதற்குப் பெரிய பெரிய ஞானிகளெல்லாம் எவ்வளவோ சிரமப்பட்டிருக்கிறார்கள். பலர் தங்கள் முயற்சியிலே தோல்வியடைந்துமிருக்கிறார்கள்.

மனம் மனிதனை எப்படியெல்லாமோ ஆட்டிவைத்து விடுகிறது. சாதாரணமாக நாம் மனம் என்று கூறுவது மனத்திலே வெளிப்படையாகத் தொழில் புரியும் சிறு பகுதியைத்தானாம். மனத்தின் பெரும் பகுதி மறைந்து நின்று காரியம் செய்கிறதாம். அதன் சக்திதான் மிக அதிகமாம்.

மனத் தத்துவம் கூறும் இந்தக் கருத்துக்களை அடிப்படையாகக்கொண்டு இந் நாடகம் உருவாகியுள்ளது. ஆனால், இக்கருத்துக்களை விளக்கவேண்டும் என்பதற்காக நான் நாடகம் எழுதவில்லை. எனது நோக்கம் வேறு. அது நாடகத்திலே வெளியாகும். புது முறையிலே நாடகம் எழுத மனத்தைப்பற்றிய ஆராய்ச்சிகள் அடிப்படையாக அமைந்தன என்பதையே தெரிவிக்க விரும்புகிறேன்.

பெ. தூரன்

## நாடகத்தில் தோன்றுவோர்

மாதவன்

சீதா

சுந்தரம்

மரகதம்

மன மருத்துவர்

சாது

ஜட்கா வண்டிக்காரன்

சரோஜா

கமலா

பத்மினி

பக்தர்கள்

மலையாளத்து மக்கள்

நாடக நிகழ்ச்சிகள் சென்னை, திருச்சிராப்பள்ளி, பழநி அதன் அருகில் உள்ள புளியம்பட்டி என்ற கிராமம் ஆகிய இடங்களில் நடைபெறுகின்றன.

# மனக் குகை

## அங்கம் ஒன்று — காட்சி ஒன்று

[திருமணத்திற்காக அணி செய்யப்பட்ட மாளிகையின் முன்புறம்; மலர்களால் வேய்ந்த மணவறை ஒரு புறத்திலே தோற்றமளிக்கிறது. சற்றுமுன்புதான் திருமணம் மங்களகரமாக முடிந்ததற்கு அறிகுறியாக நாகசுர ஒலி கேட்கிறது. திருமணத்திற்கு வந்த சரோஜா, கமலா, பத்மினி ஆகிய மூன்று இளம் பெண்கள் தனியே நின்று பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]

சரோஜா : கல்யாணம் முடிந்துவிட்டது. சீதா சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் அவள் புருஷனோடு வாழ வேண்டும். அதுதான் என் பிரார்த்தனை.

கமலா : சீதாதான் அவள் இஷ்டத்தையே சாதித்துவிட்டாளே? மாதவனைத்தான் கல்யாணம் செய்துகொள்ளுவேன் என்று ஒரே பிடிவாதமாக இருந்தாளாம். அப்படியே நடந்துவிட்டது. இனி சந்தோஷத்துக்கு என்ன குறைச்சல்?

பத்மினி : அவள் சுகமாக இருக்கவேணும் என்பதுதான் எனக்கும் ஆசை. (சற்றுத் தனிந்த குரலில்

ஆனல் மாதவன் கொஞ்சம் புத்திமாருட்டம் உள்ள வனுமே? திடீரென்று ஏதோ பயித்தியம் போல...

[மேலே பேசாமல் சுற்றிலும் சந்தேகத்தோடு பார்க்கிருள்.]

சரோஜா: ஆமாம் பத்மினி, அதைப்பற்றி நாம் ஏன் பேசவேணும்? சீதாவுக்கும் அது தெரிந்த விஷயந்தான்.

கமலா (ஆச்சரியத்தோடு): பயித்தியமென்று தெரிந்தா கல்யாணம் பண்ணிக்கொள்ளுகிருள்? எதற்கு அப்படி......?

பத்மினி: மாதவன் ரொம்ப நன்ருகப் பாடுவான். அவன் பாட்டிலே சீதா மயங்கிக் கிடக்கிருள். இரண்டு பேருக்கும் நீண்ட நாட்களாகக் காதல்.

சரோஜா: பாட்டுக்காரிக்குப் பாட்டுக்காரனைத்தானே பிடிக்கும்? இரண்டு பேரும் சேர்ந்து பாடும்போது கேட்கக் கொடுத்து வைக்கவேணும். அப்படி நன்ருகப் பாடுவார்கள்.

கமலா: 'அதற்காகப் பயித்தியம் பிடித்தவனை யாராவது கல்யாணம் செய்துகொள்ளுவார்களா?

சரோஜா: பயித்தியமென்ருல் எப்பொழுதுமே இல்லை. ஒவ்வொரு சமயத்திலே கொஞ்சம் புத்தி மாறிப் போகுமாம். பிறகு சரியாகிவிடும். அது ஒருவிதமான சித்தப் பிரமையாம்.

கமலா: அது போதாதா? திடீரென்று புத்தி மாறி அவன் என்ன பண்ணுவானே யார் கண்டார்கள்?

பத்மினி: ஆனல் அவனைப் பார்த்தால் பயித்தியமென்று யாருமே சொல்ல முடியாது. சாதாரணமாக எல்லோரையும் போலத்தான் இருக்கிருன். எப்

பொழுதாவது புத்தி பேதலித்துப் போகுமாம். தாறுமாறாக உளறுவானும். மறுபடியும் சரியாகி விடுமாம்.

சரோஜா : உஸ் - சத்தமாகப் பேசாதே, சீதா காதில் விழப்போகிறது. கல்யாணமான பிறகு இந்தப் பயித்தியமெல்லாம் தானே தெளிந்து போனாலும் போகும்.

பத்மினி : தானாகவே குணமாகாவிட்டாலும் தன்னால் அதைக் குணப்படுத்த முடியுமென்று சீதா நம்பிக்கையோடு இருக்கிறாள்.

கமலா : ம்...சீதா சௌக்கியமாக இருந்தால் போதும். இருந்தாலும் அவள் இப்படிப் பிடிவாதம் பண்ணியிருக்கக்கூடாது.

பத்மினி : காதலுக்குக் கண்ணில்லை என்பது இதுதான். மூன்று வருஷமாக எல்லோரும் எவ்வளவோ சொல்லியும் அவள் கேட்கவில்லை.

சரோஜா : கல்யாணம் முடிந்துவிட்டது, இனி அதைப் பேசி என்ன லாபம்? மாதவனுக்கும் அவ்வளவு பெரிதாக ஒண்ணும் இல்லை. இருந்தால் அவன் ஒரு பெரிய பாங்கியிலே காரியதரிசியாக இருக்க முடியுமா?

கமலா : காரியதரிசியாக இருக்கிறானா? சம்பளம் என்ன?

சரோஜா : அவனைப்பற்றி உனக்கு ஒன்றுமே தெரியாதா, கமலா? அவனுக்குச் சம்பளம் மாசம் நானூறு. அதில்லாமல் அலவன்சு எல்லாம் உண்டாம். பாங்கி மானேஜருக்கு மாதவனிடத்திலே ரொம்பப் பிரியமாம். வேலையை அத்தனை ஒழுங்காகப்பண்ணுவானும்

கமலா: ஊருக்கெல்லாம் நல்லவன்தான். எஜமானனுக்கும் நல்லவன்தான். வீட்டிலே எப்படி இருப்பானோ?

பத்மினி: மாதவனுக்கு அக்காள் ஒருத்தி இருக்கிறாள். மரகதமென்று பெயர். மாதவனுக்கு அவளைக் கண்டால்கூடப் பிடிக்காதாம். அவளைப் பார்த்தால் இவனுக்குப் பயித்தியமே வந்துவிடுமாம்.

கமலா: கூடப் பிறந்த அக்காளைக் கண்டாலே ஆகாதா?

சரோஜா: அப்படி இருக்காது. பட்டணத்திலே என்ன வேண்டுமானாலும் பேசுவார்கள். வீட்டிலே தாய் தகப்பன் இருந்தால் யாரும் ஒன்றும் பேசமாட்டார்கள். தனியாக இருக்கிறவனைப்பற்றி நாலு பேரும் நாலு விதமாகப் பேசுவது வழக்கம் தானே...?

கமலா: நாங்களெல்லாம் அப்படிப் பேசினாலும் மாதவனுக்குப் பரிந்து பேச நீ இருக்கிறாயே, அது போதும்.

[சற்று வெறுப்போடு முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள்]

சரோஜா: அம்மா, உன்னை நினைத்து நான் பேசவில்லை. வீணாகக் கோபித்துக் கொள்ளாதே.

பத்மினி: கல்யாணத்துக்கு வந்த இடத்திலே நமக்கென்ன வம்பு? சீதா பாடு, மாதவன் பாடு. அவர்கள் சந்தோஷமாக இருந்தால் போதும், வாருங்கள் புறப்படலாம்.

சரோஜா: சீதாவிடம் சொல்லிக்கொண்டு போகலாம், வாருங்கள்.

கமலா: அதோ, சீதாவே வந்துவிட்டாள் - வாம்மா சீதா, உன்னிஷ்டம் போலவே எல்லாம் முடிந்தது, சந்தோஷம். மாதவன் ரொம்ப நல்ல மாப்பிள்ளை தான். நீ அதிருஷ்டக்காரி.

சீதா: உங்களுடைய ஆசிர்வாதம் இருந்தால் அது போதும். நீங்களெல்லோரும் கல்யாணத்துக்கு வந்தது எனக்கு ரொம்ப சந்தோஷம். தாம்பூலம் வாங்கிக் கொள்ளுங்கள்.

[பக்கத்தில் ஒரு தட்டிலிருந்த தேங்காய் பழங்களை அவளே கொண்டுவந்து கொடுக்கிறாள்,]

சரோஜா: சீதா, நாங்கள் போய்வருகிறோம் - நீ சந்தோஷமாக இருக்கக் கடவுள் அருள்புரிய வேணும்.

[போகிறார்கள்]

திரை

## காட்சி இரண்டு

[ஒரு விசாலமான அறை. ஒரு பக்கத்திலே பட்டு மெத்தை விரித்த கட்டில் ஒன்று தென்படுகிறது. அதில் மாதவன் அமர்ந்திருக்கிறான். மற்றொரு பக்கத்திலே அழகாக மெருகெண்ணெய் தேய்க்கப் பெற்ற புதிய நூக்கமர பீரோ இருக்கிறது. அதன் கருகிறத்திற்கே ஒரு தனிக் கவர்ச்சி. கீழே விரிக்கப்பட்டிருந்த ரத்தினக் கம்பளத்தில் அமர்ந்து தம்புராவை மீட்டியவாறே சீதா பாடிக்கொண்டிருக்கிறாள். முழு நிலா ஜன்னலின் வழியே காட்சியளித்து அது இரவு நேரம் என்று தெரிவிக்கிறது. மின்சார விளக்கு அறைக்குள்ளே எரிந்து கொண்டிருக்கிறது.]

சீதா (பாட்டு):

பல்லவி

கண்ணனைக் கண்டு கொண்டேன்—என்றன்
கண்மலர் குளிர்ந்திடக் கனவினிலே நான்

அநுபல்லவி

தண்ணமுதான கண்கள் தாமரைபோல் வதனம்
பண்ணமுதம் பொழியும் பவளச்செவ் வாயிதழ்கள்—
கண்ணனை

சரணம்

அழகின் எல்லையவன் அருளின் எல்லையவன்
குழலின் இசைமதுவால் குறைகள் போக்கிடுவான்
மரகத மாமலைபோல் மாமணி வண்ணனவன்
கருணை வாரிதியாம்கண்மணி போன்றவனும்—கண்ணனை

[மாதவன் மெதுவாக எழுந்து வந்து பாட்டின் சரணங்களைச் சீதாவோடு சேர்ந்து பாடுகிறான். இருவருமாக மாறி மாறியும், சேர்ந்தும் பாடுகிறார்கள்.]

மாதவன் (பாட்டு முடிந்ததும்): சீதா, கண்ணனைக் கனவில்தான் கண்டாயா?

சீதா: முன்பெல்லாம் கனவிலேதான் கண்டேன் - இப்போ நேரிலேயே பார்க்கிறேன்.

[பாடுகிறாள்]

மாதவன்: இப்போ கண்ணனை எங்கே பார்க்கிறாய்? எனக்குத் தெரியவில்லையே?

சீதா: உங்களுக்குத் தெரியாது - எனக்குத்தான் தெரியும். கண்ணனும் மாதவனும் எனக்கு ஒருவரே தான்.

மாதவன் : அப்படியா?

[மாதவன் உள்ளம் பூரித்துச் சிரிக்கிருன்; சீதாவும் மகிழ்ச்சியோடு சிரிக்கிருள்.]

சீதா (மகிழ்ச்சி பொங்க): மாது, நீங்கள் அந்த நிலாப் பாட்டை ஒருதரம் பாடுங்கள்.

மாதவன் : வெளியில் போய் நிலாவிலே உட்கார்ந்து பாடலாமா? அந்தப் பாட்டுக்கு பூந்தோட்டந்தான் சரியான இடம். முழு நிலாவும் வெளியிலே அற்புதமாகக் காட்சியளிக்கிறது.

சீதா : தம்புரா வேணுமா?

மாதவன் : ஆமாம், நான் அதை எடுத்து வருகிறேன் நீ சிரமப்பட வேண்டாம்.

[தம்புராவை எடுப்பதற்காக முன்னல் வருகிருன்.]

சீதா : இதென்ன சிரமம்? உங்கள் பாட்டைக் கேட்கிறதற்கு எத்தனை சிரமம் வேணுமானலும் படலாமே?... (பயந்து) மாது, ஏன் அப்படி வெறித்துப் பார்க்கிறீர்கள்?

[மாதவன் மிரண்டு வெறித்துப் பார்க்கிருன். அவன் முகத்தில் பயம் தாண்டவமாடுகிறது. நடுங்குகிருன். வார்த்தை தடுமாறுகிறது.]

மாதவன் (மாறுபட்ட குரலில்): ஆமாம், இதெல்லாம் பசப்பு வார்த்தை. சீதாவும் பெண் ஜன்மம்தானே? மாயக்காரிகள்-ஹாய் (உறுமுகிருன்) கரும்பூதம்...... எங்கடா பூதம்........

[பலவிதமாக, பயங்கரமாகச் சப்தம் செய்கிருன். சீதா அவன் அருகில் செல்லுகிருள்.]

சீதா : மாது, பேசாமல் படுத்துக் கொள்ளுங்கள். ஏன் அப்படி வெறித்துப் வெறித்து பார்க்கிறீர்கள். அந்

தப் பீரோவில் ஒன்றுமில்லையே? - இதோ, இங்கே பாருங்கள் - உங்கள் சீதா - நான்தான் நிற்கிறேன். அந்தப் பீரோவில் ஒன்றுமே இல்லை.

மாதவன் : காட்டுக் கறுப்பு...... கரும் பேய் - என் தலையிலா அடிக்கிறாய்?

[மறுபடியும் பயங்கரமாகப் பலவித சப்தம் செய்கிறான்]

சீதா : இப்பொழுதுதான் அற்புதமாகப் பாடிக்கொண்டிருந்தீர்களே? அதற்குள் ஏன் இப்படி மனத்தை அலட்டிக் கொள்ளுகிறீர்கள்?

[மாதவன் தாறுமாறாக உளறிக் கொண்டு தொப்பென்று கீழே சாய்கிறான். சீதா தலையணையைவேகமாக எடுத்து வருகிறாள்.]

சீதா : அப்படியே தலையணையில் சாய்ந்து கொள்ளுங்கள். கொஞ்ச நேரம் பேசாமல் படுத்திருங்கள். எல்லாம் சரியாகி விடும்.

[மாதவன் புரண்டு புரண்டு படுக்கிறான். பெருமூச்சு விடுகிறான். சீதா விசிறி எடுத்து வந்து வீசுகிறாள்.]

மாதவன் : உஸ் - அப்பப்பா.

[பெருமூச்சு விடுகிறான். புரளுகிறான்.]

சீதா : இன்னும் கொஞ்ச நேரம் அப்படியே படுத்திருங்கள் - முகமெல்லாம் குப்பென்று வேர்த்து விட்டதே.

மாதவன் : சீதா, எங்கே அந்தத் துண்டை எடு - உடம்பெல்லாம் வேர்த்து ஒழுகுகிறது.

சீதா : நீங்கள் பேசாமல் படுத்துக் கொள்ளுங்கள் - நான் துடைக்கிறேன். எதனாலே திடீரென்று இப்படி ஏற்பட்டது?

மாதவன்: அந்த நாக்க மர பீரோ இருக்கிறதல்லவா? அது என்னவோ ஒரே கறுப்பாகப் பயங்கரமாகத் தெரிந்தது. நீ மீட்டிக் கொண்டிருந்த தம்புரா பீரோவுக்கு மத்தியிலே இருக்கிற மாதிரி இங்கிருந்து பார்த்தால் இரண்டும் சேர்ந்து கண்ணிலே பட்டன. தம்புராவின் முறுக்காணிகள் பல்லைக்காட்டி இளிக்கிறது போலத் தோன்றியது. அவ்வளதான் - அப்புறம் எனக்கு ஒன்றுமே தெரியவில்லை சீதா.

[எழுந்து உட்காருகிறான். தலையை ஒழுங்குபடுத்திக் கொள்கிறான்.]

சீதா: நாக்க மர பீரோ அழகாக இருக்கிறதென்று சொன்னீர்கள். அதற்காகத்தான் அதையே இன்றைக்கு வாங்கி வந்தேன்.

மாதவன்: கடையிலே பகல் வெளிச்சத்திலே பார்க்கிற போது நாக்க மரம் நாவற்பழம் போல அழகாகத் தானிருந்தது. ஆனால் அந்த நிறமே எனக்கு இப்பொழுது அருவருப்பாக இருக்கிறது.

சீதா: நாளைக்கே அந்த பீரோவைத் திருப்பி எடுத்துப் போகும்படி சொல்லி விடுகிறேன். அது வேண்டாம் நமக்கு.

மாதவன்: வெள்ளை நிறத்திலே அல்லது மஞ்சள் நிறத்திலே பீரோ கிடைக்காதா?

சீதா: ஏன் கிடைக்காது? நமக்கு விருப்பம் போல வர்ணம் கொடுக்கும்படி சொன்னால் அப்படியே செய்வார்கள்.

மாதவன்: எனக்குக் கறுப்பு நிறத்தைக் கண்டாலே இப்பொழுதெல்லாம் பிடிக்கிறதில்லை. வரவர அந்த வெறுப்பு அதிகமாய்க் கொண்டே இருக்கிறது.

சீநா : மாது, கட்டிலில் போய்ப் படுத்துத் தூங்குங்கள். நிம்மதியாகத் தூங்கினால் எல்லாம் சரியாகிவிடும்.

திரை

## காட்சி மூன்று

[திருச்சிராப்பள்ளி நகரிலே ஒரு மாளிகையின் உட்புறம். உணவருந்தும் அறையிலே சுந்தரம் ஒரு மேஜையருகில் அமர்ந்து தேநீர் பருகிக் கொண்டிருக்கிறார். அவர் மனைவி மரகதம் பக்கத்தில் நின்று பேசிக் கொண்டிருக்கிறாள். மாலை நேரம்.]

சுந்தரம் : மரகதம், நீ என்ன சொல்லு - உன் தம்பி மாதவன் தந்திரமெல்லாம் என்னிடத்திலே பலிக்காது. யாரை ஏமாற்றினாலும் இந்தச் சுந்தரத்தை அவன் ஏமாற்ற முடியாது.

மரகதம் : நீங்கள்தான் உலகத்திலேயே ரொம்பப் புத்திசாலி: அப்படி வேறு யார் இருக்கிறார்கள்? ஒருவர் கூடக் கிடையாது.

சுந்தரம் : நான் அப்படிச் சொல்லவில்லை. உன் தம்பி உன்னை ஏமாற்றலாம், என்னை ஏமாற்ற முடியாது. அதைத்தான் நீ தெரிந்து கொள்ள வேணும்.

மரகதம்: இப்போ மாதவன் என்னை எப்படி ஏமாற்றி விட்டான் ; ஒன்றும் பண்ணவில்லையே.......?

சுந்தரம் : நீ அவனைத் தேடிக்கொண்டு பட்டணத்துக்குப்போனால் உடனே அவனுக்குப் பயித்தியம் வந்து விடுகிறது - அது ஏமாற்றம் இல்லாமல் வேறென்ன ?

மரகதம்: உடம்புக்குச் சரிப்படாது போனால் அவன் என்ன செய்வான்?

சுந்தரம்: நீ அங்கே போன உடனே உடம்பு கெட்டுப் போகுமா? நீ திரும்பி வந்ததும் அங்கே சுகமாய் விடுகிறது-இப்படியும் கூடப் பயித்தியம் வருமா?

மரகதம்: வருமா என்று கேட்டு என்ன செய்கிறது? மாதவனுக்குத்தான் அப்படி வருகிறதே?

சுந்தரம்: அதுதான் ஏமாற்றுதல் என்று நான் சொல்கிறேன் மரகதம். உன்னை ஏமாற்ற அவன் போடுகிற வேஷம் அது.

மரகதம்: என்னை அவன் எதற்கு ஏமாற்ற வேணும்?

சுந்தரம்: எதற்கா? நீ அதைக் கொடு, இதைக் கொடு, நோன்புக்குச் சேலை எடு என்றெல்லாம் கேட்பாய். அதற்கு வழியில்லாமல் செய்யத்தான் இந்தப் பாசாங்கு.

மரகதம்: அவனை நான் எதற்குக் கேட்க வேணும்? கேட்டால்தானே தொந்தரவு?

சுந்தரம்: பின்னே யாரைக் கேட்பாய்? அப்பா அம்மா இருந்தால் அவர்களைக் கேட்பாய். அவர்கள் இல்லாதபோது அவனைத் தானே கேட்கவேணும்?

மரகதம்: அதற்காக இப்படிப் பாசாங்கு பண்ணுவதாக நீங்கள் நினைக்கிறீர்களா? எனக்கு இதுவரையில் அது மனசிலே படவில்லையே!

[கொஞ்சம் யோசனையில் மூழ்குகிறாள்.]

சுந்தரம்: உனக்கு வெளுத்ததெல்லாம் பால்தான். அதைத் தெரிந்து கொண்டுதான் அவன் அப்படிப் பண்ணுகிறான். உண்மையான பயித்தியமாக இருந்

தால், பாங்கிலே காரியதரிசியாக இருக்க முடியுமா? மாசம் 500 ரூபாய் சம்பளம் வாங்க முடியுமா?

மரகதம்: சரி, இந்தத் தடவை பட்டணத்துக்குப் போய் பொய் நிஜமெல்லாம் தெரிந்து கொண்டு வந்து விடுகிறேன்.

சுந்தரம்: என்ன மறுபடியும் பட்டணம் போகவா திட்டம் போட்டிருக்கிறாய்?

மரகதம்: மாதவன் கலியாணத்திற்குப் பிறகு எப்படி இருக்கிறானோ? போய்ப் பார்த்து வந்ததாகவும் இருக்கும். தம்பதிகளாக அவர்களை நம்ம வீட்டுக்குக் கூட்டி வரவேண்டாமா?

சுந்தரம்: அவனையா இங்கே அழைத்து வருகிறாய்? அவன்தான் உன்னைக் கிட்டவே வரக்கூடாதென்று வைத்திருக்கிறானே? அவன் இங்கே வருவானா?

மரகதம்: எதற்கும் கூப்பிட வேண்டிய முறை இருக்கிறதல்லவா? நான் கூப்பிடவே இல்லையென்று நாலு பேர் சொல்லக்கூடாது, அதற்காகவாவது கூப்பிட வேண்டும்.

சுந்தரம்: மற்றவர்கள் என்ன சொன்னாலும் சரி, அவனை நீ கூப்பிடக்கூடாது. கூடப் பிறந்தவனை ஏமாற்றுகிற வஞ்சகன், என் வீட்டிலே கால் வைக்கப்படாது.

மரகதம்: அவன் செய்கிறது ஏமாற்றமா உண்மையா என்பதை இந்த தடவை நிச்சயமாக் கண்டுபிடிக்கிறேன். போகவேண்டாமென்று சொல்லாதீர்கள். அப்பா சொல்லிவிட்டுப் போனது போலக் காசுமாலை பண்ணிப் போடுகிறானா, இல்லையா பார்க்கிறேன்.

சுந்தரம்: காசுமாலையா? அது வெறுங் கனவுதான். போய் அவமானப்பட்டு வரப்போகிறாய்.

மரகதம்: எல்லாம் இந்தத் தடவை பார்த்துவிடுகிறேன். இத்தனை நாளாக என்னை ஏமாற்றியதுபோல இனி அவன் செய்ய முடியாது. இன்றைக்கே பட்டணம் புறப்படட்டுமா?

சுந்தரம்: சரி, உன் விருப்பம் போலவே செய். நான் முன்னாலேயே எச்சரிக்கை செய்து விட்டேன். பிறகு உன்பாடு உன் தம்பிபாடு.

மரகதம்: காசுமாலை போட்டுக் கொண்டுவந்துவிட்டால் உங்களுக்கு என் தம்பி மேலே பிரியம் வந்துவிடும்.

சுந்தரம்: இதெல்லாம் வீண் கனவு. நீ வேண்டுமானால் பார்.

மரகதம்: இப்படியே பேசிப் பேசி என்னைத் தூண்டி விடுகிற உங்கள் தந்திரம் எனக்குத் தெரியாதா?

சுந்தரம்: தந்திரமா? காசுமாலையைப் பற்றி நானா பேச்செடுத்தேன்?

மரகதம்: பேச்செடுக்காத போனாலும் அதை மனசிலே வைத்துக் கொண்டுதானே பேசினீர்கள்? அதெல்லாம் எனக்குத் தெரியும். பட்டணம் போய்விட்டு வந்து அப்புறம் உங்களோடு பேசுகிறேன்.

திரை

## காட்சி நான்கு

[மாதவன் மாளிகையிலே விசாலமான படுக்கையறை. இரவு எட்டு மணி இருக்கும். மாதவன் தன் உத்தியோக உடைகளைக் களைந்து வேறு உடை தரித்துக் கொண்டிருக்கிறன். அவன் முகம் இருண்டு சோர்வுடன் இருக்கிறது. சீதா கவலையோடு அவனைப் பார்த்துப் பேசிக்கொண் டிருக்கிருள்.]

சீதா : என் இன்றைக்கு இவ்வளவு நேரம்? எட்டு மணிக்கு மேலாகி விட்டதே ? பாங்கிலே ஏதாவது வேலை அதிகமா ?

மாதவன் (கோட்டைக் கொண்டுபோய்த்தொங்க விட்டுக் கொண்டே): மிருகக் காட்சிசாலைக்குப் போயிருந் தோம். அதுதான் நேரமாகி விட்டது.

சீதா : மிருகக் காட்சிசாலைக்கா ? இதற்குமுன்னே நீங் கள் போனதே இல்லையா?

மாதவன் : நம்ம ரங்கசாமி இருக்கிருனே இல்லையோ, அவன் ரொம்பத் தொந்தரவு பண்ணினன். அதற் காகத்தான் போனேன். எனக்கு இஷ்டமே இல்லை.

சீதா : எந்த ரங்கசாமி ?

மாதவன் : அவன் தான் - வீட்டுக்கு வந்தால் தொண தொணவென்று பேசிகொண்டே இருப்பானே, அவன்தான். அவனுக்குச் சிநேகிதன் ஒருத்தன் கிராமத்திலேயிருந்து வந்திருக்கிருன். அவனுக்கு மிருகக் காட்சி சாலையெல்லாம் காண்பிக்க வேணு மென்று என்னையும் பிடித்து இழுத்துக்கொண்டு போனன்..... அப்பா ! ஒரே தலைவலி.

சீதா : அங்கே போனலும் இத்தனை நேரமா ?

மாதவன் : அப்புறம் சமுத்திரக் கரைக்குப்போனேம். அப்படியே நேரமாய் விட்டது. சீதா, கொஞ்சம் நீலு

கிரித் தைலம் கொண்டுவா. என்க்கு எப்படியோ இருக்கிறது.

சீதா: உங்கள் அக்கா மரகதம் வந்திருக்கிருள்.

மாதவன்: மரகதமா? எப்போ வந்தாள்?

சீதா:- சாயங்காலந்தான் வந்தாள்.

மாதவன்: சாயங்காலத்திலே திருச்சியிலிருந்து ரெயில் இல்லையே? கடிதங்கூடப் போடக் காணும்?

சீதா: காஞ்சிவரத்திலே இறங்கி விட்டு அங்கிருந்து சாயங்காலம் வந்தார்களாம்.

மாதவன்: எங்கே காணுமே?

சீதா: நீங்கள் வர நேரமாய்விட்டது. அடுத்த தெருவிலே பெரியம்மாளேப் பார்த்துவிட்டு வருகிறதாகப் போயிருக்கிருள்.

மாதவன் (அசட்டையாக): சரி சரி, எனக்குப் படுக்கை விரித்துப் போடு. படுத்துக் கொள்ளுகிறேன்.

சீதா: சாப்பிடவில்லையா?

[சீதா மெத்தையை விரிக்கிருள்.]

மாதவன்: எனக்கு எப்படியோ இருக்கிறது. ஒன்றும் வேண்டாம். அந்தத் தைலத்தைக் கொஞ்சம் தடவு.

[கட்டிலில் படுக்கிருன்.]

சீதா: உங்கள் சிநேகிதர் கூட்டிக் கொண்டு போனுரே சிற்றுண்டி உபசாரமெல்லாம் பலம் போலிருக்கிறது?

[சீதா கட்டிலில் அமர்ந்து தைலத்தை நெற்றியில் தேய்க்கிருள்.]

மாதவன்: அதெல்லாம் பேச இப்போ முடியாது சீதா. நான் கொஞ்சம் நிம்மதியாகத் தூங்கப்பார்க்கிறேன். என்னவோ மாதிரி இருக்கிறது.

சீதா: மரகதத்தைப் பார்த்து இரண்டு வார்த்தை பேசாமலா தூங்கப் போகிறீர்கள்?

மாதவன்: காலையில் பேசிக் கொள்ளலாம். இப்போ என்னால் முடியாது.

சீதா: கொஞ்சம் பாலாவது சாப்பிடுங்கள். கொண்டு வரட்டுமா?

மாதவன்: சீதா, எனக்கு ஒன்றும் வேண்டாம். நிம்மதியாகத் தூக்கம் வந்தால் அதுவே போதும்.

சீதா: சரி. மனதை அலட்டிக்கொள்ளாமல் தூங்குங்கள்.

மாதவன்: அதுதான் எனக்கும் ஆசை. இந்தச் சமயத்திலே அவள் வேறு வந்திருக்கிறாள்.

சீதா: மரகதம் கோபித்துக் கொண்டால் என்ன செய்கிறதென்று எனக்குக்கவலை. ஆனால்நீங்கள் அதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். அவள் வந்தால் நான் சமாதானம் சொல்லிக் கொள்கிறேன்.

மாதவன்: சீதா, கொஞ்ச நேரம் பாடு. பாட்டைக் கேட்டாலாவது மனசு நிம்மதியடையும். இல்லாது போனால் இரவிலே உனக்குத்தான் தொல்லை.

சீதா (பாட்டு):

கையிலுள்ள கண்ணாடி நீ
    கார் குழலில் தேன் மலரும் நீ
மை விழியில் பாவையுமே நீ
    மார்பகத்தில் கஸ்தூரி நீ
என்றனுயிர் மூச்சின் மணம் நீ
    என் கருத்தில் இன்பமாலை நீ
இந்த உடல் தந்த சுகம் நீ
    'என்னகத்தின் களஞ்சியமும் நீ

பறவைகளின் நீள் சிறகும் நீ
 பாய்ந்து மிளிர் மீனுக்குநீர் நீ
உறவெனக்கு நீயெனவே நான்
 உள்ளமதில் இன்புறுவேன் காண்
உயிரின் உயிர் என்றுனையே நான்
 உவந்துளதுன் சம்மதமோ சொல்
மயல் பெருகும் வேய்ங் குழலில் என்
 மாதவனே கீதம் வந்ததே

[பாட்டை முடித்துவிட்டுச் சீதா பார்க்கிருள். மாதவன் உறங்குகிருன். மெதுவாக அவள் வாயில் ஓர் ராகத்தை முணு முணுத்துக்கொண்டே போர்வையை எடுத்து மாதவனுக்குப் போர்த்துகிருள். ஒளி மிகுந்த விளக்குகளை அணைக்கிருள். கட்டிலினருகே ஒரு நிமிஷம் நின்று உறங்கும் மாதவனை அன் போடு பார்த்துவிட்டு ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து பக்கத்தி லிருந்த மேஜை விளக்கைப் போட்டு ஒரு நாவலை படிக்கத் தொடங்குகிருள்.]

திரை

## காட்சி ஐந்து

[மாதவன் மாளிகையில் மற்ருேர் அறை. கட்டில் ஒன்று போடப்பட்டிருக்கிறது. மாதவன் படுத்துறங்கும் அறைக்குள் செல்வதற்கான கதவு ஒரு புறமும் சமையற் கட்டிற்குச் செல்லுவதற்கான கதவு ஒரு புறமும் தெரிகின்றன. மரகதமும் சீதாவும் பேசிக்கொண்டிருக்கிருர்கள்]

மரகதம்: *சீதா, மாதவன் வந்தாய்விட்டதா?*

சீதா: *வந்து விட்டார். நீங்கள் திரும்புவதற்கு ஏன் இவ்வளவு நேரம்? மணி ஒன்பதரையாகிவிட்டதே?*

மரகதம்: *போன இடத்திலே கொஞ்சம் நாழிகையாய் விட்டது. பெரியம்மாள் சாப்பிட்டுவிட்டுத்தான்*

போக வேண்டுமென்று கட்டாயப்படுத்தி நிற்க வைத்து விட்டாள்.

சீதா: எங்கள் வீட்டிலே சாப்பிட வேண்டாயா?

மரகதம்: நாளைக்குத்தான் இருக்கிறேனே—நாளைக்குச் சாப்பிட்டால் போச்சு....தம்பி எங்கே?

சீதா: அவருக்கு ரொம்பத் தலைவலி. வந்ததும் சாப்பிடக்கூட இல்லை. உங்களைப் பார்த்துப் பேசவேணுமென்று பார்த்தார். ஆனால் தலைவலி பொறுக்க முடியாமல் படுத்துக்கொண்டார். அப்படியே தூங்கி விட்டார். தூங்கிக் கொஞ்சநேரம்தான் ஆகிறது.

மரகதம் (சந்தேகத்தோடு): சாப்பிடக்கூட முடியாமல் அப்படி என்ன தலைவலி?

சீதா: யாரோ சிநேகிதர்கள் தொந்தரவு பண்ணினார்களென்று அவர்கள்கூடப் போனாராம். அப்படியெல்லாம் போய் அலைந்துவிட்டு வந்தால் அவருக்கு உடம்பு சரிப்படுவதில்லை.

மரகதம்: எதற்கு இந்நேரத்திலே அடுப்பு மூட்டியிருக்கிறாய்?

சீதா: கொஞ்சம் டீ போடலாம் என்று நினைத்தேன்.

மரகதம்: மணி ஒன்பதுக்கு மேலிருக்கும்; இந்நேரத்தில் யாருக்கு டீ? மாதவனுக்கா?

சீதா: இல்லை-அவர் தூங்கிவிட்டார். எனக்குத்தான் கொஞ்சம் போட்டேன்.

மரகதம்: இரவிலே டீ குடித்தால் தூக்கம் வராதே?

சீதா: இன்றைக்குக் கொஞ்சம் கண்விழிக்க வேணும். நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள். படுக்கை அதோ இருக்கிறது. நீங்கள் கொஞ்சம் பால் சாப்பிடுங்கள்—கொண்டு வரட்டுமா?

மரகதம்: எனக்கு ஒன்றுமே வேண்டாம். ரெயிலில் வந்தது ஒரே அலுப்பாய் இருக்கிறது. படுத்துக் கொள்கிறேன்.

சீதா: இரவிலே ஏதாவது பொட்டுப் பொட்டென்று சப்தம் கேட்டால் அதற்காக நீங்கள் மனசை அலட்டிக் கொள்ள வேண்டாம்.

மரகதம்: என்ன, மாதவன் ஏதாவது பண்ணுவானு?

சீதா: அப்படி ஒன்றும் இல்லை. சில நாளைக்குத் தூக்கம் பிடிக்காமல் போனல் எழுந்து படுக்கை யறையிலே யே உலாவுவார்.

மரகதம்: அதனுலே எதற்கு சப்தம் உண்டாகும்...?

சீதா: கைத்தடியை ஊன்றி ஊன்றி நிலத்திலே சத்தம் பண்ணிக்கொண்டே நடப்பார்.

மரகதம்: இதென்ன இது? வேடிக்கையாக இருக்கிறதே? நீ எப்படித் தூங்குவாய்?

சீதா: தினமும் அப்படி நடக்கமாட்டார். என்றைக்காவது அவர் உலாவ ஆரம்பித்தால் அன்றைக்கு நான் தூங்க மாட்டேன்.

மரகதம்: அதற்குத்தான் டீ இந்நேரத்தில் குடிக்கிருயா? இன்னும் மாதவனுக்கு உடம்பு சரியில்லையா ?

சீதா: உடம்புக்கெல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. அதெல்லாம் தொந்தரவில்லை. நீங்கள் படுத்து நன்ருகத் தூங்குங்கள்.

மரகதம்: நீ.......?

சீதா: நான் இந்த நாவலைப் படித்து முடித்துவிட்டுத் தான் இன்றைக்குப் படுக்கலாமென்றிருக்கிறேன்.

மரகதம்: சரி, சீதா—நான் படுத்துக்கொள்கிறேன்.

[கட்டிலில் படுக்கிருள்.]

*சீதா:* *விளக்கை அணைத்துவிடட்டுமா? அல்லது உங்களுக்குத் தூங்கும்போது விளக்கு இருக்கவேணுமா?*

*மரகதம்:* *மங்கலாக எரியும் விளக்கு ஒன்றும் இல்லையா?*

*சீதா:* *இதோ போடுகிறேன்.*

[மங்கலான விளக்கைப் போடுகிருள். பிறகு மாதவன் இருக்கும் அறைக்குள் நுழைந்து கதவைத் தாளிடுகிருள்.]

*மரகதம்:* *அப்பா, ஒரே குளிராக இருக்கிறதே.*

[சீதா படுக்கையில் போட்டிருந்த வெள்ளைப் போர்வையை எடுத்து உடம்பில் போர்த்துக்கொள்கிருள். அது அவளுக்குத் திருப்தியளிக்காததால் கட்டிலை விட்டு எழுந்துவந்து தன் கைப்பெட்டியைத் திறந்து பாக்கு நிறமான ஒரு கம்பளிப் போர்வையை எடுத்துப் போர்த்துக்கொண்டு படுக்கிருள்.]

திரை

## *காட்சி ஆறு*

[மாதவன் படுக்கை அறை. மணி பன்னிரண்டு அடிக்கப் போகும் தருணம். மேஜை விளக்கும் மற்ருெரு மங்கலான விளக்கும் எரிகின்றன. சீதா சாய்வு நாற்காலியில் அமர்ந்து படித்துக்கொண்டிருக்கிருள். மாதவன் கட்டிலில் படுத்து உறங்குகிருன். சீதா நாவலை மேஜையின்மேல் வைத்துவிட்டு மெதுவாக எழுந்து வருகிருள். இனிமையான எளிய பாடலொன்றை மெதுவாகப் பாடிக்கொண்டே மாதவனருகே நின்று பார்க்கிருள். முகத்தில் புன்முறுவல் தவழ்கிறது. கலைந்த போர்வையை எடுத்துச் சரியாகப் போர்த்துகிருள். பிறகு மறுபடியும்

சாய்வு நாற்காலியில் அமர்ந்து நாவலைப் படிக்கத் தொடங்குகிருள். அப்படியே கண்ணயர்ந்து விடுகிருள். ஒரு சில விநாடி நிசப்தம்.

மாதவன் உஸ்...ஸ்...என்று பெருமூச்சு விடுகிருன். படுக்கையிற் புரள்கிருன். அவன் முகம் மாறுதலடைகிறது.]

மாதவன் (பயந்த குரலில்): *பூதமா இங்குவருது? அதைப் பார்க்கிறேன் ...ம்... என்னை ஏமாற்ற முடியுமா?*

[கலவரமும், பீதியும் முகத்தில் தோன்ற மாதவன் எழுந்து நடக்கிருன். கைப் பிரம்பை எடுத்துத் தரையில் பொட்டுப் பொட்டென்று வைத்துக்கொண்டே அறைக்குள் உலாவுகிருன். பிறகு மரகதம் படுத்திருக்கும் அறைக்குள் தாளைத் திறந்துகொண்டு நுழைகிருன். திரும்பி வந்து சுற்றுமுற்றும் மிரண்டு பார்க்கிருன். அவன் முகம் மேலும் இருளடைகிறது.]

மாதவன்: *கருங்கரடியா, பூதமா* (நடுங்குகிருன், குரூரமாக விழிக்கிருன்.) *ஒரே அடியில அந்தப் பேயை...*

[மாதவன் நாற்காலி ஒன்றைத் தூக்கிக்கொண்டு மரகதம் படுத்திருக்கும் அறைக்குள் மறுபடியும் நுழைகிருன். சீதா விழித்துக்கொள்கிருள், மாதவன் போவதைப் பயத்தோடு பார்க்கிருள்]

சீதா: *மாது, மாது, அங்கே எதற்குப் போகிறீர்கள்? அங்கே உங்கள் அக்காள் மரகதந்தான் படுத்திருக்கிருள். இங்கே வாருங்கள்.*

[சீதா எழுந்து கூவிக்கொண்டே மாதவனைத் தடுக்கப் போகிருள்.]

திரை

## காட்சி ஏழு

[மரகதம் படுத்திருக்கும் அறை. மங்கிய வெளிச்சத்தில் அவள் போர்த்துப் படுத்திருப்பது தெரிகிறது. குரூரமும் பயமும் கலந்த பார்வையோடு நாற்காலியைத் தலைக்கு மேலே ஓங்கியவாறு மாதவன் நுழைகிறான்.]

மாதவன்: *கரும்பூதம்... இதுவா என்னைப் பயமுறுத்துகிறது? இதோ ஒரே அடியில்......*

[மரகதத்தை நெருங்குகிறான். அவன் முகம் பயங்கரகரமாகத்தோற்றமளிக்கிறது. சீதா வேகமாக உள்ளே நுழைகிறாள். கண்ட காட்சியால் வெருண்டு வீரிட்டு அலறுகிறாள்.]

சீதா: *மாது, மாது, ஐயோ - வேண்டாம்......*

[மாதவன் நாற்காலியைத் தடாலென்று தரையில் போட்டு விடுகிறான். அவனும் ஏதேதோ உளறிக் கொண்டு தரையில் சாய்கிறான். இந்தக் கலவரத்தால் மரகதம் விழித்துக்கொள்கிறாள்.]

மரகதம் (பயந்து): *ஐயையோ! நான் செத்தேன்! அட பாவி.......* [மரகதம் அலறுகிறாள்.]

சீதா: *மாது, இப்படியே படுத்துக்கொள்ளுங்கள். நல்ல வேளை. அந்த நாற்காலியை அக்காள் மேலே போட்டிருந்தால் ஆபத்தாக முடிந்திருக்குமே. மாது, பேசாமல் படுத்துக் கொள்ளுங்கள்.*

மரகதம் (கோபத்தோடு): *என் தலைமேலே போட்டிருந்தாலும் ஒரேயடியாக என்பாடு முடிந்து போயிருக்கும். ஏண்டா, இப்படியெல்லாம் பாசாங்கு பண்ணியா என்னை ஏமாற்றப் பார்க்கிறாய்? உன் பெண்டாட்டியும் இதிலே சேர்ந்திருக்கிறாளா?*

சீதா: கொஞ்சநேரம் தயவுசெய்து நீங்கள் சத்தம் போடாமல் இருங்கள். அவர் அப்படியே அமைதியாகப் படுத்திருக்கட்டும்.

மரகதம் (இன்னும் கோபமாக): அடடா, இந்தப் பாசாங்கெல்லாம் எனக்குத் தெரியாதா? அப்பவும் அவர் போக வேண்டாமென்று எச்சரிக்கை செய்தார். நான் அவர் பேச்சைக் கேட்காமல் வந்தது தப்பாகப் போயிற்று.

சீதா: அக்கா, நீங்கள் வந்ததிலே ஒன்றும் தப்பே இல்லை. அவருக்கு உடம்பு சரியில்லையென்று தூங்கப் போகிறபோதே சொல்லவில்லையா நான்?

மரகதம்: அதனுடைய ரகசியமெல்லாம் எனக்கு இப்பொழுது தெரிந்துவிட்டது..நான் அவனை ஏதாவது பணம் வேணுமென்றோ, நகை வேணுமென்றோ வாய்திறந்து கேட்டேனா? பிறகு எதற்குப் பாசாங்கு?

சீதா: இதைப் பாசாங்கென்றா நினைக்கிறீர்கள்? அப்படி இல்லவே இல்லை.

மரகதம்: போதும், உன்னுடைய பசப்பு வார்த்தையெல்லாம் எனக்குத் தேவையில்லை. இதோ நான் புறப்படுகிறேன். என் கைப் பெட்டி எங்கே?

சீதா: அக்கா, எனக்கு இருக்கிற கவலைக்கு நீங்கள் வேறு கோபிக்க வேணுமா?

மரகதம்: அடடா, மாயக்கள்ளி, இதெல்லாம் எனக்குத் தெரியும் - சரி, இனிமேல் நான் இந்தப் பக்கம் எட்டிப் பார்க்கிறதே இல்லை. நீயும் உன் புருஷனும் சுகமாக இருங்கள். இந்த வீடு இன்றோடு எனக்கு அற்றுப்போய்விட்டது.

[மரகதம் கைப் பெட்டியை எடுக்கிறாள்]

சீதா: அவர் சோர்வு நீங்கி எழுந்திருந்தால் உண்மை தெரியவரும். அது வரையிலும் கோபிக்காமல் இருங்கள்.

மரகதம் (வெறுப்போடு): இன்னும் ஒன்றும் இதற்கு மேலே தெரிய வேண்டாம். நான் இனி ஒரு நிமிஷம் இங்கே தங்கமாட்டேன்.

[புறப்படுகிறாள்]

சீதா: இந்நேரத்திலே எங்கே அக்கா போவீர்கள்? விடியும் வரையிலாவது இருங்கள்.

மரகதம்: ஆமாம்—நான் உயிரோடு போகிறதுகூட உனக்குப் பிடிக்கவில்லையா? எனக்குச் சீர் சிறப்பு ஒன்றும் வேண்டாம். உயிரோடு போய்ச் சேர்ந்தால் போதும்.

சீதா: அக்கா, இப்படிக் கோபமாகப் போகிறீர்களே, என் மேலே கூட உங்களுக்கு இரக்கமில்லையா?

[தேம்பி அழுகிறாள்]

மரகதம்: அந்த நீலிக் கண்ணீரெல்லாம் எனக்குத் தெரியும். அதனாலே நான் இனி ஏமாற மாட்டேன். இனி இந்த வீட்டில் கால் வைக்கிறதில்லை.

[கோபத்தோடு வேகமாகப் போகிறாள். சீதா தேம்பி அழுது கொண்டே மாதவனிடம் வருகிறாள்.]

சீதா: மாது, எப்படி இருக்கிறது?

[முன்றானையால் மாதவன் முகத்தைத் துடைக்கிறாள். அவன் மெதுவாகக் கண் விழித்துப் பார்க்கிறான்]

மாதவன்: உஸ்......அப்பப்பா......சீதா, நான்......

சீதா: கட்டிலிலே போய்ப் படுங்கள் - காலையில் பேசிக் கொள்வோம்.

மாதவன்: சாயங்காலம் அந்த மிருகக் காட்சி சாலைக்கு நான் போயிருக்கக்கூடாது.

சீதா: அதனால் என்ன?

மாதவன்: அங்கே அந்த ஹிமாலயக் கரடியைப் பார்த்தேன். கருகருவென்று இருந்தது. அதைப் பார்த்ததிலிருந்து எனக்கு என்னவோ மாதிரி மனத்திலே கலவரம் உண்டாய் விட்டது.

சீதா: உங்கள் அக்கா கோபித்துக் கொண்டு போய் விட்டாள்.

மாதவன்: இந்நேரத்திலே எங்கே போவாள்?

சீதா: பெரியம்மா வீட்டுக்குத்தான் போயிருக்க வேணும். நல்லவேளை - அந்த நாற்காலி அவள் தலையிலே விழுந்திருந்தால் உயிருக்கே ஆபத்தாக முடிந்திருக்கும்.

மாதவன்: எனக்கென்னவோ அவள் படுத்திருந்த இடத்தில் ஒரு கரும் பேய் படுத்திருந்தது போலத் தெரிந்தது.

சீதா: அக்காளை ஏமாற்றுவதற்காக இப்படி நீங்கள் பாசாங்கு செய்வதாக அவள் நினைக்கிறாள். நான் என்ன சொல்லியும் அவள் கேட்கவில்லை.

மாதவன்: அவள் போனால் போகிறாள், சீதா. உன்னைப் பற்றித்தான் எனக்குக் கவலையாக இருக்கிறது. என்னைக் கலியாணம் பண்ணிக் கொண்டதால் நீ எத்தனை கஷ்டப்பட போகிறாயோ?

சீதா: எனக்கென்ன கஷ்டம்? நீங்கள் சுகமாக இருந்தால் போதும்.

மாதவன்: அதுதான் இல்லையே?

சீதா: நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப்படக்கூடாது. கவலைப்படாமலிருந்தால் சீக்கிரம் எல்லாம் குணமாகிவிடுமென்று சொல்லுகிறார்கள்.

மாதவன்: எனக்கென்னவோ நம்பிக்கையே போய்விட்டது. எத்தனையோ டாக்டர்களைப் பார்த்து விட்டோம். மருந்து சாப்பிட்டு எனக்கும் சலித்துப் போய்விட்டது.

சீதா: மனக் கோளாறுகளைச் சரிபடுத்தப் புதிதாக இப்போ ஒரு டாக்டர் வந்திருக்கிறாராம். அந்த மன மருத்துவரிடம் நாளைக்குப் போகலாமா?

மாதவன்: அவன் மனசுக்கு ஊசிபோடுகிறானோ? எல்லாம் ஏமாற்றம். மனமருத்துவனும், மனமருத்துவன்!...

சீதா: அப்படி நினைக்கப்படாது, அந்த டாக்டர் ஊசி போடுவதே இல்லையாம். உண்மையிலே அவர் மருந்தே கொடுப்பதில்லை. மனக்கோளாறுகளின் காரணத்தைக் கண்டு பிடித்து அதைச் சரிபடுத்த வழி சொல்லுகிறாராம். ரொம்பப்பேருக்கு ஆச்சரியமாக, நல்லது பண்ணியிருக்கிறார் என்று கேள்வி.

மாதவன்: மருந்து கொடுக்காமல் மந்திரம் பண்ணுகிற வைத்தியமா இது? உலகத்திலே இப்படி ஏமாற்றம் ஒன்று இரண்டா?

சீதா: நேரிலே போய்ப் பார்த்தால் விஷயம் தெரியும். அதற்கு முன்னே எப்படி......?

மாதவன்: சீதா, நான் வரத் தயாராகஇல்லை. நீ வேணுமானால் போய் அவனைப் பார்த்து விட்டுவா-எனக்கு ஆட்சேபம் இல்லை.

சீதா: நான் போய் அவரிடம் பேசிப் பார்க்கிறேன். திருப்தியாக இருந்தால் அப்புறம் இரண்டு பேருமாகப் போவோம்.

மாதவன்: திருப்தியில்லையென்று நீ வரவா போகிறாய்? உனக்கு எல்லாம் திருப்தியாகத்தான் இருக்கும். உன்னுடைய ஆசை நிறைவேற வேணுமே?

சீதா: உங்கள் அக்காளுக்குச் சமாதானம் செய்ய வேண்டாமா? அவர்களுக்கு ஏதாவது ஒரு தங்கச் சங்கிலி அல்லது காசுமாலை வாங்கி அனுப்புங்கள்.

மாதவன்: எதற்காக அனுப்பவேணும்? அதையும் ஒரு பாசாங்கென்று அவள் சொல்லுவாள். அவளுக்குப் பணத்திலும் காசிலும் இருக்கிற பிரியம் என் மேலே கால்பாகங் கூட கிடையாது. அவள் புருஷன் அதை விட.........

சீதா: பிரியமில்லாமலா உங்களைப் பார்க்க வந்தாள்?

மாதவன்: ஏதாவது சீதனம் வாங்கலாம் என்று வந்திருப்பாள்......

சீதா: உங்களுக்கு ஏன் அவள் பேரிலே இத்தனை வெறுப்பு?

மாதவன்: உண்மையாக நான் சொல்கிறேன். அக்காளைக் கண்டால் எனக்குப் பிடிக்கிறதே இல்லை. ஏன் என்று எனக்கே தெரியவில்லை. ஆனாலும் அவளுக்கு இத்தனை நகை ஆசை கூடாது.

சீதா: பிறந்த வீடென்றால் பெண்களுக்கு ஆசை இருக்காதா? சரி, தூங்கலாமா? ரொம்ப நேரமாகிவிட்டது. நிம்மதியாகத் தூங்குங்கள்.

[எழுந்து பக்கத்திலுள்ள தங்கள் படுக்கையறைக்குப் போகிறார்கள்.] திரை

# அங்கம் இரண்டு—காட்சி ஒன்று

[மனமருத்துவர் தமது சிகிச்சை அறையில் அமர்ந்திருக்கிறார். சீதா உள்ளே நுழைகிறாள்.]

மனமருத்துவர்: வாங்கம்மா-உங்கள் பேர்தான் சீதாவா? என்ன விசேஷம்?

சீதா: என் கணவருக்கு ஏதோ ஒரு விதமான மனக் கோளாறு இருக்கிறது. அதைப்பற்றி உங்களிடம் ஆலோசனை கேட்கலாமென்று வந்தேன். சாதாரண வைத்தியமும் மருந்தும் பயன் கொடுக்கவில்லை.

மனமருத்துவர்: உங்கள் கணவர் எங்கே?

சீதா: அவர் வரவில்லை. முதலில் நான் வந்து உங்களிடம் விஷயத்தைக் கூறி விட்டுப் பிறகு அவரை அழைத்து வரலாமென்று நினைத்தேன்.

மனமருத்துவர்: அவருடைய நடத்தையில் விபரீதம் ஏதாவது காணப்படுகிறதா?

சீதா: திடீரென்று ஒவ்வொரு சமயத்திலே மனம் பேதலித்துப் போகிறது. கொஞ்ச நேரம் தாறு மாறாகப் பேசுகிறார். பெண்களைத்தான் அதிகமாக திட்டத் தொடங்குகிறார். வெறிக்க வெறிக்கப் பார்க்கிறார். பிறகு அப்படியே சோர்ந்து படுத்து விடுகிறார்.

மனமருத்துவர்: முகத்திலே பயக் குறி தோன்றுகிறதா?

சீதா: ஏதோ பேயைக் கண்டு நடுங்குவது போலத் தோன்றுகிறது.

மனமருத்துவர்: பலாத்காரமாக ஒன்றும் செய்வதில்லையே?

சீதா: இதுவரையிலும் ஒன்றும் இல்லை. அன்றைக்கு அவருடைய அக்காள் வந்திருந்தபோது அவள் மேலே நாற்காலியைத் தூக்கி வீசப் போய் விட்டார். நல்லவேளை; அப்படி ஒன்றும் நடக்கவில்லை.

மனமருத்துவர்: இந்தப் பிரமை உண்டாவதற்கு ஏதாவது குறிப்பாகக் காரணம் தெரிகிறதா?

சீதா: ஒருநாள் கறுப்பான நூக்கமரப் பீரோவைக் கண்டு அவருக்கு புத்தி பேதலித்துவிட்டது. கருங்கரடியைப் பார்த்துவிட்டு வந்த அன்றிரவும் அப்படியாயிற்று. அதனால் கறுப்பான உருவங்களைக் கண்டால் இப்படி ஏற்படுகிறதோ என்று சந்தேகப் படுகிறேன். இப்போது வீட்டிலே கறுப்பாக எதுவும் நான் வைப்பதில்லை.

மனமருத்துவர்: மனத்திலே ஏற்பட்ட ஏதோ ஒருவித அதிர்ச்சியால்தான் இந்தப் பிரமை ஏற்பட்டிருக்க வேண்டும். சிறுவயதிலே ஏதாவது அதிர்ச்சி ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அவரைச் சோதனை செய்து பார்க்காமல் நிச்சயமாக நான் ஒன்றும் சொல்ல முடியாது.

சீதா: நாளைக்கு நான் அவரை அழைத்து வருகிறேன். நீங்களே பரீக்ஷை செய்து பாருங்கள்.

மனமருத்துவர்: அவருடைய உள்ளத்தின் ஆழத்திலே புதைந்து கிடக்கும் சிறு வயசு அநுபவங்களை நான் வெளிப்படுத்த வேணும். அவரையே அவற்றை நினைவுக்குக் கொண்டு வரும்படி செய்துவிட்டால் பிறகு எல்லாம் சுலபமாக முடிந்து போகும்.

அதற்கு அவருடைய ஒத்துழைப்பு ரொம்ப அவசியம். அது இலலாமல் இந்தக் காரியம் வெற்றியடையாது.

சீதா (உற்சாகத்தோடு): நாளைக்கு நான் அவரை அவசியம் அழைத்து வருகிறேன். டாக்டர், உங்களைத்தான் நம்பியிருக்கிறேன்; என் வாழ்வு உங்கள் கையில்...

மனமருத்துவர்: கவலைப்படாதே அம்மா; என்னால் ஆனதைச் செய்கிறேன்.

சீதா: நாளைக்கு எப்போ வரவேண்டும்?

மனமருத்துவர்: சாயங்காலம் ஏழு மணிக்குச் சரியாக வந்துவிடுங்கள்.

சீதா: ஆகட்டும் டாக்டர். போய்வருகிறேன்.

[டாக்டரை வணங்கிவிட்டுப் புறப்படுகிறாள்.]

திரை

## காட்சி இரண்டு

[மாதவன் மாளிகை. சீதா உள்ளே நுழைகிறாள்.]

மாதவன்: சீதா, வந்துவிட்டாயா?

சீதா: ஏது இவ்வளவு சீக்கிரம் பாங்கிலிருந்து திரும்பி விட்டீர்கள்? மணி நான்குகூட ஆகவில்லையே? என்ன, ஏதோ விசனமாக இருக்கிறீர்களே உடம்புக்கு ஒன்றும் இல்லையே?

மாதவன்: இன்றைக்கு எனக்குச் சம்பள உயர்வு கொடுப்பதாக மானேஜர் தீர்மானம் செய்திருக்

தார். நானே எல்லாவற்றையும் கெடுத்து விட்டேன்...

சீதா: ஏன்? என்ன நடந்தது?

மாதவன்: மானேஜருக்கு இதுவரையில் என் மேலே ரொம்பப் பிரியம். என் வேலையிலே அவருக்கு அளவு கடந்த திருப்தி.

சீதா: ஆமாம்; இதை முன்பே சொல்லியிருக்கிறீர்கள்.

மாதவன்: அதனுலே சம்பளம் 50 ரூபாய் அதிகம் பண்ணியதோடு என்னிடம் அதைப்பற்றித் தெரி வித்துப் பேசுவதற்கு வந்தார். நான் வேலை செய்யும் அறைக்கே வந்தார். என் அதிருஷ்டம், எல்லாம் கெட்டுத் தொலைந்தது.

சீதா: உங்கள் அறைக்கே வந்தாரா?

மாதவன்: ஆமாம். வந்து தனியாக என்னேடு பேசி உற்சாகப்படுத்த ஆசைப்பட்டிருக்கிருர். ஆனல் நான் அவரை வாயில் வந்தபடி பேசிவிட்டேன்.

சீதா: ஏன்? திடீரென்று உடம்புக்குச் சரிப்பட வில்லையா?

மாதவன்: மானேஜர் என்றைக்குமில்லாமல் புதிதாக இன்றைக்குக் கன்னங்கரேலென்று ஆல்பாக்கா கோட்டுப் போட்டுக்கொண்டு வந்தார். தலையிலே வேறு கறுப்புக் குல்லாய் வைத்திருந்தார். அதை யெல்லாம் பார்த்ததும் எனக்கு சுயநினைவே போய் விட்டது. என்னவோ உளறிக் கொட்டிவிட்டேன்.

சீதா: பாங்கிலே இதுவரையிலும் இப்படி நடந்ததே இல்லையே?

மாதவன் (விசனத்தோடு): ஆமாம், இதுவரையிலும் பாங்கிலே யாருக்கும் என்னுடைய மனநோய்

தெரியாது. இன்றைக்கு எல்லாம் வெட்ட வெளிச்சமாய்விட்டது. சம்பள உயர்வு கொடுக்கவந்த மானேஜர் இப்போது எனக்கு ஒரு மாதம் நோட்டீஸ் கொடுத்திருக்கிறார். அடுத்த மாதத்திலிருந்து எனக்கு வேலை கிடையாது. தெருவிலே நிற்க வேண்டியதுதான்.

சீதா: மானேஜரிடம் விஷயத்தைச் சொன்னால் அவர் அநுதாபம் காட்டுவார். நீங்கள் கவலைப்பட வேண்டாம்.

மாதவன்: இனிமேல் அநுதாபம் ஏது? பாங்க் காரியதரிசி ஒரு பயித்தியமென்று தெரிந்தால் பாங்கே அழிந்து போகும். பாங்கின்மேல் யாருக்கும் நம்பிக்கை இருக்காது. என்னை இனிமேல் அவர் வேலையில் வைத்துக் கொள்ளவேமாட்டார்.

சீதா: அவரிடம் போய்ச் சொல்லி ஒரு இரண்டு மாதம் ரஜா வாங்கிக்கொண்டு வந்தால் அந்த ரஜா முடிவதற்குள் உடம்பை சொஸ்தப்படுத்திக் கொள்ளலாம். நீங்கள் நேரில் கேட்டால் அவர் மறுக்க மாட்டார்.

மாதவன்: சீதா, இனிமேல் நான் அவர் முகத்திலேயே விழிக்க முடியாது. அவ்வளவு பிரியத்தோடு இருந்தவரை வாயில் வந்தபடி பேசிவிட்டு என்ன மூஞ்சியைக் கொண்டு நான் அவரைப் பார்க்கச் செல்வது? அது என்னால் முடியாது.

சீதா: சரி, நீங்கள் போகவேண்டாம். நான் போய் அவருக்குச் சமாதானம் சொல்லி வருகிறேன். ரஜா தீருவதற்குள்ளே உங்கள் நோயைக் குணப்படுத்தி விடலாம்.

மாதவன்: அது எப்படி குணமாகப் போகிறது? நாளுக்கு நாள், அதிகமாகத்தான் ஆகிறது.

சீதா: நான் அந்த மனமருத்துவரைப் பார்த்து வந்தேன். அவர் நிச்சயம் குணமாக்குவாரென்று எனக்கு தைரியம் ஏற்பட்டிருக்கிறது. நாளைக்குச் சாயங்காலம் அவசியம் அவரைப் போய்ப் பார்ப்போம். அதற்கு முன்னாலே மானேஜரிடம் நான் போய்ப் பேசி வருகிறேன்.

மாதவன்: சரி, சீதா. உன் இஷ்டப்படியே செய். உன்னுடைய பாவத்தையும் நான் கட்டிக்கொண்டிருக்கிறேன். நீ இல்லாவிட்டால் பேசாமல் இந்த உயிரை மாய்த்துக்கொள்ளலாம். இப்படி உயிரை வைத்துக் கொண்டு என்ன பிரயோஜனம்?

சீதா: மாது, எதற்கு இப்படிப் பேசுகிறீர்கள்? எல்லாம் ஒரு மாதத்துக்குள்ளே குணமாகிப் போகும். கடவுள் நமக்கு நல்ல கதி கொடுப்பார். கவலைப்படாதீர்கள்.

மாதவன் (கவலையோடு): சீதா, உன்னுடைய நம்பிக்கையில்தான் நான் உயிர்வைத்திருக்கிறேன்.

[பெருமூச்சு விடுகிறான்.]

சீதா: மாது, அப்படியே சோபாவிலே படுத்திருங்கள். ஒரு நிமிஷத்திலே காபி போட்டு வருகிறேன்...

[சமையலறைக்குள் போகிறாள். மாதவன் கன்னத்தில் கை வைத்துக் கவலையோடு அமர்ந்திருக்கிறான்.]

திரை

## காட்சி மூன்று

[மறுநாள் மாலை ஏழு மணி. மனமருத்துவர் சிகிச்சை அறை. சீதா நுழைகிருள்.]

மனமருத்துவர்: வாம்மா சீதா, உன் கணவர் வந்திருக்கிருரா?

சீதா: ஆமாம், வெளியிலே இருக்கிருர்.

மனமருத்துவர்: மறுபடியும் ஏதாவது சம்பவம் நடக்கவில்லையே?

சீதா: நேற்று பாங்க் மானேஜரிடம் இவர் தாறுமாருக நடந்துகொண்டார். அதனுல் வேலைக்கே ஆபத்து வந்துவிட்டது.

மனமருத்துவர்: அடடா! அப்படியா?

சீதா: மானேஜரை நான் இன்று காலையில் பார்த்து ஒரு மாதிரி சமாதானம் பண்ணியிருக்கிறேன். இரண்டு மாதம் ரஜாக் கொடுத்திருக்கிருர். அதற்குள்ளே உடம்பு குணமாகி டாக்டர் அத்தாட்சியோடு வந்தால் திரும்பவும் அதே வேலையைக் கொடுப்பதாகச் சொல்லியிருக்கிருர்.

மனமருத்துவர்: இரண்டு மாதமா? அதற்குள்ளே எல்லாம் குணமாகிவிடும். பயப்படவேண்டாம். ஆமாம், மானேஜரோடு ஏன் கோபித்துக்கொண்டார்?

சீதா: கோபித்துக்கொள்ளவில்லை. ஆனுல் பாங்கிலேயே நேற்றுச் சித்தத் தடுமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. மானேஜர் கறுப்பாகச் சட்டையும் குல்லாவும் போட்டிருந்தாராம். அதனுல் இவருக்கு எப்படியோ பீதியேற்பட்டுத் தாறுமாருகப் பேசியிருக்கிருர்.

மனமருத்துவர் (யோசனையோடு): அப்படியா? சரி அவரை உள்ளே வரச்சொல்.

[சீதா வெளியே சென்று மாதவனை அழைத்து வருகிறாள்.]

மாதவன்: நமஸ்காரம், டாக்டர்.

மனமருத்துவர்: வாருங்கள், நமஸ்காரம். இப்படி சௌகரியமாக உட்காருங்கள். அம்மா, சீதா நீங்கள் இங்கேயே இருக்கிறீர்களா அல்லது......?

மாதவன்: அவள் இங்கேயே இருக்கலாமே?

சீதா: இல்லை டாக்டர். நான் வெளியிலே இருக்கிறேன். அவரோடு தாராளமாய்ப் பேசுங்கள்.

[சீதா வெளியே போகிறாள்.]

மனமருத்துவர்: மாதவன், நீங்கள் இந்தப் புது முறையான சிகிச்சையைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? மனமருத்துவம் என்று இதைச் சொல்லுவார்கள். இந்தச் சிகிச்சையிலே மனத்தை அறிவதுதான் முக்கியம்.

மாதவன்: அதற்கு ஏதாவது எந்திரம் உண்டா? இருதயத் துடிப்பை அறிவதற்கு மார்புச்சோதனை செய்யும் கருவி யிருக்கிறதுபோல இதற்கும் ஏதாவது கருவி உண்டா?

மனமருத்துவர்: நீங்களேதான் எந்திரம். நீங்களே தான் கருவி. உங்களை வைத்தே இந்தச் சோதனையைச் செய்து விடலாம்.

மாதவன்: எனக்குப் புரியவில்லையே, டாக்டர்? நானே எந்திரமா?

மனமருத்துவர்: மனத்தை அறிவதற்கு வேறு எந்திரமே தேவையில்லை. நீங்கள் மட்டும் என்மேலே முழு நம்பிக்கை வைத்து ஒத்துழைத்தால் போதும். இந்த மனக் கோளாறின் காரணத்தைச் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம். காரணம் உங்களுக்கு விளங்கிவிட்டால் உடனே நோயும் குணமாகிவிடும். அவ்வளவுதான்.

மாதவன் (சந்தோஷத்தோடு): அதெப்படி?

மனமருத்துவர்: இப்போ நான் சொல்கிறபடி செய்கிறீர்களா? அதோ அந்தப் படுக்கையிலே தாராளமாகப் படுத்துக்கொள்ளுங்கள். விளக்கைக் கொஞ்சம் மங்கலாக வைத்துவிடுகிறேன். பிறகு நான் சில கேள்விகள் கேட்பேன். அப்படிக் கேட்கிறபோது உங்கள் மனசிலே வந்த எண்ணங்களையெல்லாம் அப்படியே மறைக்காமல் வாய்விட்டுச் சொல்லவேணும். எதையும் ஒளிக்கக்கூடாது. அந்த எண்ணங்கள் மிகவும் கேவலமானவையாக இருந்தாலும் ஒளிக்கக் கூடாது. தயங்காமல் வெளியே சொல்ல வேணும்.

மாதவன்: எதற்கு டாக்டர்?

மனமருத்துவர்: மனத்திலே மறை மனம் என்று ஒரு பகுதி இருக்கிறது. அதிலே எத்தனையோ உணர்ச்சிகள் அநுபவங்கள் குழந்தைப் பருவத்திலே உண்டானவையெல்லாம் மறைந்து கிடக்கும். அவைகளைக் கண்டு பிடித்துவிட்டால் இந்தக் கோளாறின் உண்மை வெளியாகிப் போகும். அதற்குத்தான் இது உபாயம்.

மாதவன்: மனசிலே தோன்றுவதையெல்லாம் சொல்ல வேணுமா?

மனமருத்துவர்: ஆமாம். அதுதான் முக்கியம். ஒன்றையும் மறைக்கக்கூடாது. எவ்வளவு கேவலமான எண்ணமாக இருந்தாலும் பரவாயில்லை, சொல்லுங்கள். நான் அதை வெளியே யாரிடமும் சொல்ல மாட்டேன். அதைப்பற்றிச் சந்தேகம் வேண்டாம்.

மாதவன்: சரி, டாக்டர்; கேள்வியெல்லாம் கேளுங்கள்.

[படுக்கையிலே படுக்கிறான்.; மனமருத்துவர் விளக்கை மங்கலாக வைக்கிறார்.]

மனமருத்துவர்: நான் கேட்கிறது கேள்வியே அல்ல. ஏதாவது சில வார்த்தைகளைச் சொல்வேன். ஒரு வார்த்தையைக் கேட்டதும் உள்ளத்திலே என்ன என்ன எண்ணமெல்லாம் மேலெழுந்து வருகின்றனவோ அவற்றையெல்லாம் அப்படியே யோசனை பண்ணிப் பார்க்காமல் சொல்லவேணும்.

மாதவன்: அப்படியே சொல்கிறேன்.

மனமருத்துவர்: கை கால்களைத் தளர்த்தி விட்டுக் கொள்ளுங்கள். எல்லாம் ஒய்வு நிலையில் இருக்கட்டும். இதோ இப்பொழுது நான் ஒரு வார்த்தை சொல்லப்போகிறேன். இமயமலைக் கரடி - இமயமலைக் கரடி.......

மாதவன்: ஹா, பெரிய பூதம் - அதோ மரத்திலே தாவி ஏறுகிறது—வாயிலிருந்து அக்கினியைக் கக்குகிறது. ஐயோ, கண் போச்சு......குரல்வளையைப் பிடிக்க வருகிறதே......யார் அந்தப் பிள்ளை—அந்தப் பொட்டச்சி எங்கே ஓடுகிறாள்?

[வேகமாக மூச்சு விடுகிறான். உஸ்...என்று சத்தமிடுகிறான்.]

மனமருத்துவர்: இன்னும் தாராளமாகச் சொல்லுங்கள் - இப்பொழுதுதான் விஷயம் வருகிறது.

மாதவன்: ஸ்......ஸ்......ம்......அம்மா, அக்காளைப் பிடித்து அடி - அவளா பிசாசு?...ஐயோ - ம்... ம்...ம்...

[திணறுகிறான் - பெருமூச்செறிகிறான் - பயந்து கத்துகிறான் - படுக்கையிலே புரளுகிறான் - அவன் முகத்திலே வேர்வை வழிகிறது.]

மனமருத்துவர்; மேலே சொல்லுங்கள் - ஒன்றும் பயமில்லை. இமயமலைக் கரடி - கரும் பூதம்.

மாதவன்: உஸ்......அப்பா......ஐயையோ....டாக்டர் இனி என்னாலே முடியாது. வீணாக என்னைத் துன்பப்படுத்த வேண்டாம்.

மனமருத்துவர்: இந்தத் துவாலையிலே முகத்தையெல்லாம் துடைத்துக்கொள்ளுங்கள். ரொம்ப வேர்த்துவிட்டது. இன்னொரு முறை பார்ப்போம்.

[மாதவன் துவாலையில் துடைத்துக்கொண்டே எழுந்து உட்காருகிறான்.]

மாதவன்: சீதா எங்கே?

மனமருத்துவர்: இதோ, கூப்பிடுகிறேன்.

[மனமருத்துவர் வெளியேபோய், சீதாவுடன் திரும்புகிறார்.]

மாதவன்: சீதா, போகலாமா?

சீதா: டாக்டர் நாங்கள் போகலாமா?

மனமருத்துவர்: மாதவன், இதோ பக்கத்து ஸ்நான அறையில் போய் முகமெல்லாம் அலம்பிக்கொண்டு வாருங்கள் - அந்தத் துவாலையை எடுத்துக்கொள்ளலாம்.

மாதவன்: சீதா, இரு. ஒரு நிமிஷத்திலே வந்துவிடு கிறேன்.

[மாதவன் துவாலையை எடுத்துக் கொண்டு மறுபுற மாகப் போகிறான்]

சீதா (ஆவலோடு): டாக்டர், ஏதாவது விஷயம் புரிந்ததா?

மனமருத்துவர்: ஓரளவு துப்புக் கிடைத்திருக்கிறது. பால்யத்தில் ஏற்பட்ட மன அதிர்ச்சிதான் காரண மென்று நிச்சயமாகத் தெரிகிறது. ஆனால் ஒரே தடவையில் எல்லாம் கண்டுபிடிக்க முடியாது. ஓரள வுக்கு மேலே மாதவன் சொல்ல மறுத்து விட்டார். முதல் தடவையிலே வற்புறுத்தக்கூடாது என்று நானும் விட்டுவிட்டேன். பக்குவமாகத்தான் அவர் ஒத்துழைப்பைப் பெறவேணும். அவர் இணங்கி வந்தால் இன்னும் இரண்டு மூன்று பரீட்சைகளில் விஷயத்தைக் கண்டு பிடித்து விடலாம்.

சீதா: மறுபடியும் எப்போது வரலாம்?

மனமருத்துவர்: இரண்டு நாள் பொறுத்துவரவேணும். நாளைக்கு அவர் ஓய்வெடுத்துக் கொள்ளட்டும். அதற்கடுத்த நாள் இந்த நேரத்திற்கு வாருங்கள்.

சீதா: அதுவரையிலும் ஏதாவது எச்சரிக்கைவேணுமா டாக்டர்?

மனமருத்துவர்: கறுப்பான பொருள்கள் அவர் கண் ணில் படாமல் பார்த்துக்கொள்ளுங்கள். இரவிலே மரமெல்லாம் கறுப்பாகத் தெரியும் - அதனாலே வெளியே அந்த நேரத்திலே போகவேண்டாம். நீங் களும் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேணும்.

மனப் பிரமையிலே ஏதாவது விபரீதமாக நடந்து விடப்போகிறது.

சீதா: எனக்கொன்றும் நேராது. இது வரையிலும் என்னை அவர் ஒன்றும் செய்ததில்லை.

மனமருத்துவர்: பெண்கள் என்றாலே அவருக்கு அடிமனத்திலே வெறுப்பிருக்கிறதுபோலத் தெரிகிறது. அதன் காரணத்தைக் கண்டுபிடிக்க வேணும்.

[மாதவன் திரும்பி வருகிறான்.]

சீதா: அதோ அவர் வந்து விட்டார். நாங்கள் போய் வருகிறோம், டாக்டர். உங்களுக்கு ரொம்ப வந்தனம்.

மனமருத்துவர்: இரண்டு நாளுக்கப்புறம் வாருங்கள். எல்லாம் சரியாகிவிடும். நமஸ்காரம், மாதவன்.

மாதவன்: நமஸ்காரம், டாக்டர்.

[சீதாவும் மாதவனும் போகிறார்கள்.]

திரை

## காட்சி நான்கு

[மாதவன் இல்லத்தில் படுக்கை அறை. மறுநாள் இரவு பத்து மணி. ஒரு 'கட்டிலில் படுக்கை விரித்திருக்கிறது. உறங்கச் செல்லுவதற்காக மாதவன் பைஜாமா அணிந்து கொண்டிருக்கிறான். ஜன்னலிலுள்ள திரைகளைச் சீதா சரிப்படுத்திக் கொண்டிருக்கிறாள். பிறகு மின்சார ஸ்விச்சு உள்ள இடத்திற்கு வருகிறாள்.]

சீதா: மாது, இந்த விளக்கை அணைத்து விட்டு, மங்கலான விளக்கைப் போடட்டுமா?

மாதவன். ஆமாம், படுத்துக் கொள்வோம். மணி பத்தாகி விட்டது.

[சீதா ஸ்விச்சு அருகே நின்றுகொண்டே பேசுகிருள்.]

சீதா: நாளைக்குச் சாயங்காலம் டாக்டரிடம் போக வேணும் - வெளியிலே நாளைக்கு எங்கும் போகாமல் ஒய்வெடுத்துக் கொண்டால் நல்லது.

மாதவன்: நாளைக்குச் சாயங்காலமா? எதற்கு?

சீதா: அந்த மன மருத்துவர் நாளைக்குத்தானே வரச் சொல்லியிருக்கிருர்? சாயங்காலம் ஏழு மணிக்கு....

மாதவன்: சீதா, இனிமேல் அந்த மாந்திரீகரிடம் நான் வரமுடியாது, நேற்ருேடு அது முடிந்தது.

சீதா (திடுக்கிட்டு): என்ன இப்படிச்சொல்லுகிறீர்கள்?

[பிரகாசமான விளக்கை அணைக்காமலே நின்று கொண்டிருக்கிருள்.]

மாதவன்: எனக்கு அவருடைய சிகிச்சை முறையில் நம்பிக்கையே இல்லை. என்னவோ கேள்வி கேட்கிருராம்—பதில் சொல்லுகிறதாம். இந்த மந்திரத்திலே மாங்காய் விழாது.

சீதா: இன்னும் கொஞ்ச நாளைக்குப் பார்க்கலாமே? அதற்குள்ளே எப்படித் தீர்மானிக்க முடியும்? மன மருத்துவ முறையிலே எத்தனையோ கோளாறுகளெல்லாம் குணமாகிவிடுகின்றனவாம்.

மாதவன்: அந்த இருட்டறையிலே படுத்திருந்தது முதல் எனக்கு மனசு அதிகமாகக் கவலைப்படுகிறது. அதனலே நான் அங்கே இனி வரமாட்டேன்.

சீதா: மாது, எனக்காக வரப்படாதா?

[அப்படிக் கேட்டுக்கொண்டே மாதவன் அருகில் வருகிருள். மாதவன் படுக்கையில் அமர்கிருன்.]

மாதவன்: உனக்காகத்தான் அன்றைக்கு வரச் சம்மதித்தேன். என்மேலே அன்பிருந்தால் இனிமேல் அங்கே கூப்பிடாதே. அங்கே மறுபடியும் போனால் நான் முழுப் பயித்தியமாகிவிடுவேன்.

சீதா: இப்படி ஒரே தீர்மானமாகப் பேசினால் நான் என்ன செய்யட்டும்?

மாதவன்: சீதா, அது கிடக்கட்டும்—ஒரு பாட்டுப் பாடு. தூங்குவதற்கு முன்னாலே கொஞ்சம் நிம்மதியாவது ஏற்பட்டால் நல்லது. இந்த மனமருத்துவத்தைப்பற்றிச் சொல்லி இப்போ மனசைக் குழப்பாதே.

சீதா: இதோ பாடுகிறேன்...ஆனால் நாளைக்கு டாக்டரிடம் வரச் சம்மதிக்க வேணும்.

மாதவன்: எனக்கு அதிலே நம்பிக்கையே இல்லை, சீதா. ஏன் வீணாகத் தொந்தரவு செய்கிறாய்? நான் அநுபவிக்கும் கவலையெல்லாம் போதாதா?

சீதா: சரி மாது, இதைப்பற்றி நாளைக்குப் பேசிக்கொள்வோம். இப்போது பாட்டுப் பாடலாம், முதலில் நீங்கள் பாடுங்கள்—பிறகு நான் பாடுகிறேன்.

மாதவன் (பாட்டு):

எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம்
என்ன பொருத்தமோ
இந்தப் பொருத்தம் உலகில் பிறருக்
கெய்தும் பொருத்தமோ

சரணம்

வள்ளால் உன்னைப் பாடப் பாட வாய் மணக்குதே
வஞ்ச வினைகள் எனை விட்டோடித் தலை வணங்குதே

எள்ளா துனது புகழைக் கேட்க செவி நயக்குதே
எந்தாய் தயவை எண்ணுந் தோறும் உளம் வியக்குதே
(எனக்கும் உனக்கும்)

பாட்டா லுனது பதத்தை நாடிப் பாடும் வாயரே
பதியே யிந்த உலகி லெனக்கு மிகவும் நேயரே
நாட்டா ரெனினும் நின்னையுளத்து நாட்டா ராயிலே
நயவேன் சிறிதும் நயத்தல் கயக்கும் எட்டிக் காயிலே
(எனக்கும் உனக்கும்)

[இரண்டாம் சரணத்தை ஒருமுறை மாதவன் பாடுகிறான். இரண்டாம் முறையாகச் சீதா பாடுகிறாள்.]

சீதா (பாதி பாடுவதற்குள் மாதவன் இயல்பு மாறுவது கண்டு): *மாது, என்னது? ஏன் அப்படி வெறித்துப் பார்க்கிறீர்கள்*

மாதவன் (சிரமத்தோடு): *அதென்ன அப்படிக் கரடி போல் உறுமுகிறதே?*

[மாதவன் முகத்தில் பயக்குறி காண்கிறது.]

சீதா: *அதுவா? ஆகாய விமானம் போகிறது. வேறொன்றுமில்லை, மாது.*

மாதவன்: இல்லை, *கரடிதான் கத்துகிறது. அல்லது அது பேயா?*

சீதா; *டெல்லிக்கு இரவிலே போகிற விமானந்தான் அது. அதோ விமானத்தின் பச்சை சிவப்பு விளக்குக்கூடத் தெரிகிறதே. ஜன்னல் வழியாகப் பாருங்கள்.*

[மாதவன் ஜன்னல் பக்கம் வருகிறான். மின்சார விளக்குத் திடீரென்று அணைந்து இருள் சூழ்கிறது.]

மாதவன் (பயத்தோடு): *விளக்கெல்லாம் அணைந்து போச்சே.*

சீதா: ஒன்றுமில்லை, மாது. மின்சார சப்ளை தடைப் பட்டிருக்கும். இப்பொழுதெல்லாம் இப்படி அடிக் கடி ஏற்படுகிறதே. இதிலே ஒன்றும் பயமில்லை.

[சட்டென்று விளக்கு வந்து விடுகிறது]

மாதவன்: சீதா, அதோ விளக்கு வந்துவிட்டது. நான் படுத்துக்கொள்கிறேன். எப்படியோ ஒரு மாதிரி யாக இருக்கிறது. இன்னும் என்னவோ சத்தம் கேட்கிறதே?

சீதா: இப்பொழுது ஒன்றும் இல்லையே? தூரத்திலே மோட்டார் போகிற சத்தமாக இருக்கும். நீங்கள் நிம்மதியாகத் தூங்குங்கள், விளக்கை அணைத்துவிட லாமா?

மாதவன்: மங்கல் விளக்கை மட்டும் போட்டுவிடு.

[மாதவன் படுத்துக்கொள்கிறான். சீதா போர்வையை எடுத்துப் போர்த்துகிறாள், பிறகு ஏதோ புத்தகத்தை எடுத்துச் சிறிதுநேரம் படிக்கிறாள். பிறகு தனது படுக்கையைக் கீழே விரிக்கிறாள். மங்கல் விளக்கைப் போட்டுவிட்டுப் படுத்துக்கொள்கிறாள். ஒரு சில நிமி ஷம் செல்லுகிறது.]

மாதவன்: உஸ்... அப்பப்பா

[முதலில் அர்த்தமில்லாது ஏதேதோ முணு முணுக் கிறான். படுக்கையில் புரளுகிறான்.]

ஆகா... சீதா ஏரோப்ளேனில் போகிறாளா? உம்...ம் அப்படியா விஷயம்? அவளை இப்போ என்ன செய் கிறேன் பார்... என்னையா ஏமாற்றப் பார்க்கிறாள்?

[படுக்கையை விட்டு எழுந்திருக்கிறான். பிரம்பை எடுத் துக்கொண்டு அறைக்குள்ளே நடக்கிறான். பயங் கலந்த பார்வையோடு சுற்றுமுற்றும் பார்க்கிறான்.

சீதாவையும் பார்க்கிருன். அவளை அடிக்கப்போவது போல அவளையும் நாற்காலியையும் மாறி மாறிப் பார்க்கிருன்.]

சீதா (திடீரென்று வீரிட்டு அலறி): *ஐயோ மாது, ஐயோ மாது, நான் செத்தேன்.*

[அவள் உரக்கக் கூவும் சமயத்திலே மாதவன் ஓடுவதால் தடதடவென்று நாற்காலி உருளுகிறது. படாரென்று தடி சுவரில் மோதுகிறது. செம்பு, தம்ளர் உருளுகின்றன. பலவகையான குழப்பமான சப்தங்கள் உண்டாகின்றன.]

மாதவன்: *சீதா, சீதா, எங்கே?*

சீதா: *ஹா...மாது, இதோ நான்.*

மாதவன்: *சீதா, ஐயோ எங்கே பெரிய விளக்கைக் காணுமே? உனக்கு என்ன நேர்ந்தது?*

சீதா: *எனக்கொன்றுமில்லை. மாது, நீங்கள் சௌக்கியமா? இதோ விளக்கைப் போடுகிறேன்.*

[விளக்கைப் போடுகிருள். பயந்து நடுங்கி வேகமாக மூச்சு விடுகிருள்.]

மாதவன்: *சீதா, ஏன் அப்படி அலறிஞய்?*

சீதா: *என்ன பயங்கரமான கனவு? நீங்கள் ஏதோ மலை உச்சியில் ஏறிக் கீழே குதிப்பதுபோலக் கனுக் கண்டு பயந்தே போனேன்.*

மாதவன் (சிரித்து): *அதற்கா இப்படி அலறிஞய்? நல்ல வேளை, நான் ஒன்றும் உன்னைச் செய்துவிடவில்லையே?*

சீதா: *நீங்கள் ஒன்றும் செய்யவில்லை. ஆனால் படுக்கப் போகும்போது ஆகாய விமானத்தின் சத்தம் கேட்டுடு, வீதி விளக்குத் திடீரென்று அணைந்ததைக்*

கண்டும் நீங்கள் கலவரமடைந்தது எனக்குக் கவலை யுண்டாக்கியது. அந்தக் கவலையோடே நான் படுத்துத் தூங்கினேன். அதுதான் இப்படிக் கனவாக ஏற்பட்டிருக்கிறது.

மாதவன்: அட பயித்தியமே, இனிமேல் உனக்குத் தான் நான் வைத்தியம் பண்ணவேணும் போலிருக்கிறது.

சீதா: உங்களுக்கு உடம்பு குணமாகாவிட்டால் எனக்குப் பயித்தியமே பிடித்துவிடும். மாது, நாளைக்கு அந்த மனமருத்துவரிடம் போகலாமா? மாட்டேன் என்று சொல்லக்கூடாது.

மாதவன்: சீதா வேறு எங்கே வேண்டுமானாலும் போகலாம். அந்த டாக்டரிடம் மாத்திரம் வேண்டாம். எனக்கு நம்பிக்கையே இல்லை.

சீதா: என்ன இப்படிப் பிடிவாதமாகப் பேசுகிறீர்களே?

மாதவன்: நம்பிக்கையில்லாமல் சிகிச்சை பெற முடியுமா? அந்த டாக்டர் தம்மை முழுதும் நம்பச் சொல்கிறார். என்னால் அது முடியவே இல்லை. நம்பிக்கை யில்லாவிட்டாலும் வரத்தான் வேண்டும் என்று நீ சொன்னால் நான் வரத் தயார்.

சீதா: சரி, தூங்கலாம். நாளை மறுபடியும் யோசிப்போம்.

[மாதவன் கட்டிலில் படுக்கிறான். சீதா பிரகாசமான விளக்கை அணைத்துவிட்டுத் தனது படுக்கையில் படுக்கிறாள்.]

திரை

## காட்சி ஐந்து

[மனமருத்துவர் தமது சிகிச்சை அறையில் நாற்காலியில் அமர்ந்திருக்கிறார், சீதா நமஸ்காரம் செய்துகொண்டே நுழைகிறாள்.]

மனமருத்துவர்: வாம்மா சீதா. உன் கணவர் வந்திருக்கிறாரா?

சீதா: அவர் வரவில்லை டாக்டர். நான் எவ்வளவோ மன்றாடினேன்...

மனமருத்துவர்: ஓகோ, அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லையா? சரி சரி, அவரை வற்புறுத்திக் கூட்டி வந்தாலும் அதனால் பலன் ஏற்படாது.

சீதா: ஏன் டாக்டர்?

மனமருத்துவர்: நோயாளியின் முழு ஒத்துழைப்பும் இருந்தால்தான் இந்த முறையில் பலன் கிடைக்கும். அவருக்கு விருப்பமில்லையென்றால் அவர் மனத்திலே எதிர்ப்புக் கிளர்ச்சிகள்தான் மேலோங்கி நிற்கும். அந்த நிலையிலே எனது சிகிச்சை முறைபயன்படாது. அவர் வந்தாலும் அவர் மனத்திலுள்ள கோளாறின் காரணத்தை அறிந்துகொள்ள முடியாது.

சீதா (விசனத்தோடு): நான் உங்களைத்தான் பூரணமாக நம்பியிருந்தேன். இனி என்ன செய்வேன்?

மனமருத்துவர்: கவலைப்படாதே அம்மா. கொஞ்ச நாள் பொறுத்துப்பார். அதற்குள் உன் கணவர் மனம் மாறி இங்கு வரத் தாமாகவே விரும்பலாம்.

சீதா: ரஜா தீருவதற்குள் அவருக்குச் சுகமாகாவிட்டால் வேலையே போய்விடும்.

மனமருத்துவர்: என்ன செய்யலாம்? எல்லாம் சௌக்கியமாக முடியுமென்று நம்புவோம்.

சீதா: நான் போய் வருகிறேன் டாக்டர். ஏதாவது ஆலோசனைகள் கூறினால் நல்லது.

மனமருத்துவர்: மாதவனுடைய உள்ளத்திலே மறைந்து கிடக்கும் அந்தப் பாலிய வயதில் ஏற்பட்ட அதிர்ச்சியை எப்படியாவது கண்டுபிடிக்க வேணும். நாம் கண்டுபிடித்தால் மட்டும் போதாது. மாதவனே அதைக்கண்டு கொண்டால் உடனே இந்த மனக்கோளாறு நீங்கிப் போகும். அதுவரையில் நீயும் கொஞ்சம் உஷாராக இரு. இல்லாவிட்டால் அவர் உனக்கே ஏதாவது தீங்கு செய்துவிடுவார்.

சீதா: எனக்கு அதைப்பற்றிக் கவலையில்லை. ஆனால் அவர் நேற்றிரவு நடந்துகொண்ட விதத்திலிருந்து எனக்கே சந்தேகம் உண்டாகியிருக்கிறது.

மனமருத்துவர்: அதுதான் ஜாக்கிரதையாய் இரு, பிறகு பார்ப்போம்.

சீதா: மறுபடியும் தங்களிடம் வருவதற்கு ஏதாவது செய்யலாமா?

மனமருத்துவர்: இந்தச் சிகிச்சையை மேற்கொண்டு நடத்துவதற்கு அவர் வெளிப்படையாக இசைந்தால் மட்டும் போதாது. உண்மையாகவே அதற்குச் சாதகமாக அவர் மனமும் திரும்ப வேண்டும். கொஞ்சநாள் பொறுத்து அப்புறம் யோசிப்போம். இப்பொழுது நான் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை.

சீதா: நான் போய் வருகிறேன் டாக்டர். எனக்காக நீங்கள் எடுத்துக்கொண்ட சிரமத்திற்கு ரொம்பவும் நன்றி.

[போகிறாள்]

திரை

## அங்கம் மூன்று — காட்சி ஒன்று

[மாதவன் மாளிகை. ஓர் அறையிலே சீதா கவலையோடு அமர்ந்திருக்கிருள். மாதவன் வெளியே சென்றிருக்கிருன். மாலை சுமார் நான்கு மணி. சரோஜா உள்ளே நுழைகிருள்.]

சரோஜா: சீதா, சௌக்கியமா?

சீதா: யார் சரோஜாவா? வா வா. இத்தனை நாட்களாக என்னை மறந்துவிட்டாயா?

சரோஜா: இல்லை சீதா, உன் கல்யாணத்திற்குப் பிறகு நான் பட்டணத்திலேயே இல்லை. டெல்லிக்குப் போய் அண்ணு வீட்டில் இரண்டு மாதம் இருந்து விட்டுப் போன வாரந்தான் வந்தேன்.

சீதா: டெல்லியிலே அண்ணு வீட்டிலே எல்லோரும் சௌக்கியமா?

சரோஜா: எல்லோரும் சௌக்கியந்தான். எனக்குக் கூட டெல்லி ரொம்பப் பிடித்தது......ஆமாம், சீதா - நீயேன் இப்படி வாடி இருக்கிருய்?

சீதா (மெதுவாகச் சிரித்து): இல்லையே, நன்ருகத்தானே இருக்கிறேன்...!

சரோஜா: மாதவனுக்கு இப்போ வேலைகூட இல்லையாமே? அவருக்கு உடம்பு எப்படி இருக்கிறது?

சீதா (விசனத்தோடு): அதுதான் சரோஜா எனக்கு ஒரே கவலையாக இருக்கிறது. நாளாக நாளாக நிலைமை மோசமாகத்தான் தெரிகிறது. எத்தனையோ வைத்தியம் செய்து பார்த்தாயிற்று.

சரோஜா: புதிதாக ஏதோ மனமருத்துவரிடம் போனீர்களாமே?

ம—4

சீதா: ஆமாம், அந்தச் சிகிச்சையையும் முழுவதும் செய்ய முடியவில்லை. அவருக்கு அதிலே நம்பிக்கை ஏற்படவில்லை.

சரோஜா: பட்டணத்திற்கு ஒரு சாது வந்திருக்கிறார்; கேள்விப்பட்டாயா?

சீதா: யாரது? எனக்குத் தெரியாதே?

சரோஜா: அவரைப்பற்றி உனக்குச் சொல்லலாமென்றுதான் வந்தேன். எத்தனையோ நோயை எல்லாம் அவர் தீர்த்து விடுகிறாராம்.

சீதா (ஆவலோடு): அப்படியா? அவரைப் பார்க்க முடியுமா?

சரோஜா: ஓ, யார் வேண்டுமானாலும் பார்க்கலாம். ரொம்ப நல்ல சாது.

சீதா: சரோஜா, அவரைப்பற்றி எனக்கு எல்லா விவரமும் சொல்லுகிறாயா?...இரு, ஒரு நொடியிலே கொஞ்சம் காபி போட்டுக்கொண்டு வருகிறேன்; சாப்பிட்டுக்கொண்டே பேசலாம்.

[சீதா எழுந்து சமையலறைப்பக்கம் போகிறாள்.]

சரோஜா: நான் அங்கேயே வருகிறேன். பேசிக்கொண்டே இரண்டு பேருமாகக் காபி தயாரிப்போம்.

சீதா: ஆமாம், வா சரோஜா. இரண்டு பேரும் இப்படி ஒன்றாக இருந்து ரொம்ப நாளாகிவிட்டது.

[சமயலறைக்குச் செல்லுகிறார்கள்.]

திரை

## காட்சி இரண்டு

[சத்திரத்திலே ஒரு கூடம். காலை 9 மணி. சாது ஒருவர் தரையிலே ஆசனம் விரித்து அமர்ந்திருக்கிறார். சீதா அங்கு வந்து சாதுவைப் பணிகிறாள்.]

சீதா: சுவாமி, நமஸ்காரம்.

சாது: வரவேணும், வரவேணும். இப்படி அமருங்கள்.

சீதா: சுவாமி, தங்களை நம்பித்தான் அடியேன் வந்திருக்கிறேன்.

சாது: யாரம்மா நீ? என்ன விசேஷம்?

சீதா: என் பெயர் சீதா. என் கணவருக்கு ஏதோ ஒரு வகையான சித்தப் பிரமை இருக்கிறது. என்ன என்னவோ சிகிச்சையெல்லாம் செய்து பார்த்தாய் விட்டது. குணம் ஒன்றும் கிடைக்கவில்லை.

சாது: சித்தப் பிரமையா?

சீதா: ஆமாம் சுவாமி, அதைப் போக்க வழியறியாது நான் கலங்கிக் கொண்டிருக்கும்போது எனது சிநேகிதி ஒருத்தி தங்களுடைய பெருமையைப்பற்றிக் கூறினாள். தங்களிடம் முறையிட்டுக் கொண்டால் தங்களுடைய தவபலத்தினால் நோயைப் போக்கி விடுவீர்களென்று நம்பிக்கையோடு வந்திருக்கிறேன். அடியாளை ஆதரிக்கவேணும்.

[மறுபடியும் வணங்குகிறாள்.]

சாது: என்னுடைய தவபலத்தினாலா?

[சாதுவின் முகத்தில் புன்னகை தோன்றுகிறது.]

சீதா: ஆமாம் சுவாமி. துறவு பூண்டு தாங்கள் அடைந்திருக்கும் ஆத்மிக பலம்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்.

சாது: இன்னொருவருடைய மனோ பலத்தைவிட நோயாளியின் மனோபலந்தான் இங்கே முக்கியம். மனமருத்துவர் யாரையாவது பார்த்தீர்களா?

சீதா: பார்த்தோம். அவருடைய முறையிலே கொஞ்சம் குணம் வரும்போலத் தெரிந்தது. ஆனால், என் கணவருக்கு அந்தமாதிரி சிகிச்சையில் நம்பிக்கை ஏற்படவில்லை. மறுபடியும் அந்த மனமருத்துவரைப் பார்க்கக்கூட அவர் மறுக்கிறார்.

சாது: நான் ஒரு யோசனை கூறுகிறேன். அதன்படி செய்வீர்களா?

சீதா: நிச்சயமாகச் செய்வோம் ஸ்வாமி. நீங்கள்தான் எங்களுக்குக் கதி.

சாது: அம்மா, ஒரு மனிதனிடத்திலே மற்றொருவனுக்கு அதிகமாக நம்பிக்கை வருவது கஷ்டம். ஆனால், ஆண்டவனிடத்திலே பூரண நம்பிக்கை வரலாம். அப்படி நம்பிக்கை உண்டாகுமானால் அதனால் ஆச்சரியமான காரியத்தை எல்லாம் சாதித்துவிடலாம்.

சீதா: என் கணவர் தெய்வபக்தி உடையவர்தான். எனக்கும் தெய்வத்தினிடத்திலே பூரண நம்பிக்கை உண்டு.

சாது: நல்லது. பழனியைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

சீதா: நான் அங்கே போனதில்லை. ஆனால், கேள்விப்பட்டிருக்கிறேன். என் கணவருடைய பாட்டனார் பழனிக்குப் பக்கத்திலே ஒரு கிராமத்திலே வாழ்ந்து வந்தாராம். என் கணவர்கூடக் குழந்தைப் பருவத்திலே அந்தக் கிராமத்தில்தான் பாட்டனார் வீட்டில் வளர்ந்தார்.

சாது: அந்த ஸ்தலத்துக்கு வருகிறவர்களுக்கு இறைவனிடத்திலே இருக்கிற நம்பிக்கையின் பலத்தால் பல விதமான நன்மைகள் ஏற்படுகின்றன. அங்கே சென்று நோய் குணமாகித் திரும்புகிறவர்கள் எத்தனையோ பேருண்டு. ஆண்டவனிடத்திலே இருக்கிற நம்பிக்கைதான் அதற்கு அடிப்படையான காரணம்.

சீதா: பழனி தண்டாயுதபாணியின் சக்தியைப் பற்றிப் பல பேர் சொல்லி நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

சாது: உன் கணவருடைய மனோ வியாதியைப் போக்க தெய்வ நம்பிக்கை நல்ல சாதகமாக இருக்கும். ஆனால், இந்தக் காலத்திலே படித்தவர்கள் இதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

சீதா: சுவாமி, நாங்கள் அப்படியில்லை.

சாது: அப்படியானால் நீங்கள் பழனிக்குச் சென்று ஒரு வாரம் பத்து நாள் தங்கியிருங்கள். காலையிலும் மாலையிலும் மலைமீதேறி சுவாமி தரிசனம் செய்யுங்கள். பிறகு பார்க்கலாம்.

சீதா: சுவாமி, தங்களுடைய வாக்கு எனக்கு ஆறுதல் அளிக்கிறது. நாளைக்கே புறப்படுகிறோம்.

சாது: தெய்வத்தினிடத்திலே நம்பிக்கையோடு இரு. உனக்கு ஒரு கவலையும் வராது. போய்வா அம்மா.

சீதா: சுவாமி, நமஸ்காரம். போய் வருகிறேன். உங்களுடைய ஆசீர்வாதத்தாலே என் கணவருக்குச் சுகமாகி விடுமென்று நம்புகிறேன்.

[புறப்படுகிறாள்]

திரை

## காட்சி மூன்று

[மாதவன் மாளிகை. மாதவனும் சீதாவும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]

மாதவன் : பழனிக்கா போகச் சொன்னார்? இன்றைக்கே புறப்படுவோம்.

சீதா : அந்த சாதுவின் வார்த்தையிலே எனக்கு நம்பிக்கை இருக்கிறது

மாதவன் : பழனிக்குப் போய் ரொம்ப வருஷமாகிறது. இத்தனை வருஷமாக அங்கே போகாததே தப்பு.

சீதா : நீங்கள் முன்னாலே அங்கே போயிருக்கிறீர்களா?

மாதவன் : சிறு வயசிலே எத்தனையோ தடவை போயிருக்கிறேன். நான் வளர்ந்ததே பழனிக்குப் பக்கத்தில் தானே?

சீதா : அந்தக் கிராமத்துக்கு என்ன பேர்?

மாதவன் : புளியம்பட்டி.. என்னுடையசின்னத் தாத்தா குடும்பத்தினரெல்லாம் இப்பவும் அங்குதான் இருக்கிறார்கள். சிற்றப்பாவும் அங்கே இருக்கிறார்.

சீதா : அவருக்கு அங்கே என்ன உத்தியோகம்?

மாதவன் : உத்தியோகமா? கிராமத்திலே உத்தியோகம் ஏது? அவருக்கு நிலம் இருக்கிறது. அதைக் கவனித்துக் கொண்டிருக்கிறார். விவசாயந்தான் அவருக்கு உத்தியோகம். கல்யாணத்தின்போது அவரை நீ பார்க்கவில்லையா?

சீதா : ஒரு தடவை பார்த்தால் நினைப்பிருக்குமா? மறந்து போய்விட்டது.

மாதவன் : பழனிக்குப் போய்விட்டு அப்படியேபுளியம்பட்டிக்கும் போய்வரலாம். பழனியிலிருந்து பக்கந்தான். குதிரை வண்டியிலே போகலாம்.

*சீதா: சரி, இன்றைக்கே புறப்படலாமா?*

*மாதவன்: ஆமாம், இரவு தூத்துக்குடி எக்ஸ்பிரஸிலேயே போவோம். காலையிலே 8½ மணிக்குப் பழனி போய்விடலாம். புறப்படுவதற்கு எல்லாம் தயார் செய்.*

திரை

## *காட்சி நான்கு*

[பழனி மலை மேலே உட் பிராகாரத்திற்கு முன்னுள்ள முன் மண்டபம். அழகிய கல்தூண்கள் பல காணப்படுகின்றன. மாலை நேரம். சற்றுத் தூரத்திலுள்ள மணியின் ஓசை சிறிது கேட்டு அடங்குகிறது. இரண்டு பக்தர்கள் திருப்புகழ் பாடிக் கொண்டு நுழைகிறார்கள். கையில் மலர் மாலை ஏந்தியிருக்கிறார்கள்.]

பக்தர்: (இருவரும் சேர்ந்து பாட்டு)

'நாதவிந்துக லாதி நமோ நம'

முதல் பக்தன் (பாட்டை இடையிலே நிறுத்தி விட்டு): *வேல் வேல்-வேல் முருகா.*

இரண்டாம் பக்தன்: *கலியுக வரதா, முருகா, சரணம். சரணம்.*

முதல் பக்தன்: *முருகனுடைய பெருமையை யாரால் சொல்ல முடியும்? பழனியம்பதியிலே அவர் கலியுக வரதனாகவே காட்சியளிக்கிறார்.*

[மாதவனும் சீதாவும் வருகிறார்கள்.]

இரண்டாம் பக்தன்: *முருகா சரணம், முதல்வா சரணம்-பழனி வேலப்பா சரணம்.*

[இரு பக்தர்களும் சேர்ந்து மறுபடியும் 'நாதவிந்துக லாதி நமோ நம' என்று பாடிக்கொண்டே மறுபக்கமாகப் போகிறார்கள்.]

சீதா: ஆஹா, இந்த மலையைச் சுற்றி இயற்கையின் காட்சி எவ்வளவு அற்புதமாக இருக்கிறது!

மாதவன்: குறிஞ்சி நிலத்துத் தெய்வமாகிய முருகனுக்கு இது உகந்த இடம்.

சீதா: மக்களுக்கு முருகனிடத்திலே இருக்கும் பக்தியைப் பார்த்தீர்களா? அவர்களுடைய பக்திப் பரவசத்தைக் காணக் காண எனக்கு மெய் சிலிர்க்கிறது.

மாதவன்: ஆயிரக்கணக்காக மக்கள் முருகனுடைய தரிசனத்திற்கு வந்து கொண்டே இருக்கிறார்கள்.

[ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாக மலையாளத்து மக்கள் சிலர் பக்திப் பரவசத்தோடு வருகிறார்கள்.]

மலையாள மக்கள் (எல்லோருமாகச் சேர்ந்து): வேலும் மயிலும், சாமியே சரணம்-வேலும் மயிலும் சாமியே சரணம் - தண்டாயுதபாணியே சரணம்.

சீதா: இந்த மக்களுக்கு முருகனிடத்திலே எத்தனை பக்தி இருக்கிறது!

மாதவன்: மலையாளத்துக்காரர்களுக்குப் பழனியென்றால் உயிர். பழனி முருகனிடத்திலே அவர்களுக்கு அத்தனை நம்பிக்கை.

சீதா: அவர்கள் கோஷமிடுவதைக் கேட்டால் எனக்குப் புளகாங்கித மேற்படுகிறது.

[மலையாள மக்கள், 'வேலும் மயிலும், சாமியே சரணம்' என்று கூறிக்கொண்டே செல்லுகிறார்கள்

கோயில் மணிகள் உள்ளே கலகல வென்று ஒலிக்கின்றன.]

சீதா: நாமும் தரிசனத்திற்குச் செல்லலாமா? எல்லோரும் உள்ளே போகிறார்கள்.

மாதவன்: நாமும் முருகன் மேலே ஒரு பாடலைப் பாடிக் கொண்டே போவோம்.

சீதா ஆமாம், மாது. குழந்தைத் தெய்வம் என்ற பாடலைப் பாடலாம்.

மாதவன்: [பாட்டு]

பல்லவி

குழந்தைத் தெய்வமய்யா—அதைக்
கும்பிடுவோம் வாரீர்—குழந்தை

அநுபல்லவி

அழகின் வடிவமதாய் அமர்ந்த தேவன் தனை
பழநியம் பதியில் பார்த்து மகிழ்ந்திடுவோம்—
குழந்தை

சரணம்

பாலும் பழமும் தேனும் கையினில்
பாங்குடன் ஏந்தியே சென்றிடுவோம்
கோல மயில் வாகனன் கேட்டவை
கொடுக்கும் தெய்வ மய்யா—குழந்தை

[சரணத்தைப் பாடும்போது சீதாவும் சேர்ந்து கொள்கிறாள். பாட்டு முழுவதும் முடிந்ததும் பல்லவியைமறுபடியும் பாடிக்கொண்டு உட்பிரகாரத்திற்குப் போகிறார்கள்.]

(திரை)

# காட்சி ஐந்து

[இரவு சுமார் எட்டு மணி. பழனியிலுள்ள ஒரு சத்திரத்திலே சௌகரியமான ஓர் அறையிலே மாதவனும் சீதாவும் அமர்ந்திருக்கிறார்கள்.]

மாதவன்: சீதா, இந்தச் சத்திரம் உனக்குச் சௌகரியமாக இருக்கிறதா?

சீதா: எல்லாம் சௌகரியமாக இருக்கிறது. நல்ல விசாலமான அறையாகத்தான் நமக்குக் கொடுத்திருக்கிறார்கள்.

மாதவன்: எனக்கும் திருப்தியாகத்தான் இருக்கிறது.

சீதா: பழனியிலே ஏராளமாகச் சத்திரங்கள் இருக்கும் போலிருக்கிறதே?

மாதவன்: எத்தனை சத்திரங்கள் இருந்தாலும் விசேஷ காலங்களில் இடங் கிடைப்பது வெகு சிரமம்.

சீதா: சாதாரண காலத்தில்கூட மக்கள் கூட்டங் கூட்டமாக வந்துகொண்டேதான் இருக்கிறார்கள். சாயங்காலம் மலையேறும்போது கூட்டத்தைப் பார்த்தீர்களா?

மாதவன்: கூட்டம் அதிகமாக இருந்ததோடு அவர்களுடைய பக்தியைப் பார்த்தாயா?

சீதா: பக்தியில்லாதவனுக்குக்கூடப் பழனிக்கு வந்து இங்கு வரும் மக்களையும் அவர்களுடைய பக்திப் பிரவாகத்தையும் பார்த்தால் உடனே பக்தி வந்துவிடும்.

மாதவன்: இங்கு வந்ததிலிருந்து எனக்கு ஒரே உற்சாகமாக இருக்கிறது, சீதா. மனக் கோளாறெல்

லாம் தீர்ந்துவிட்டதுபோல் தைரியம் வந்திருக்கிறது.

சீதா: கடவுள் நம்பிக்கையால் ஆச்சரியமான காரியமெல்லாம் நடக்க முடியுமென்று அந்த சாது அன்றைக்கே கூறினர்.

மாதவன்: அவர் வாக்கு உண்மைதான் போலிருக்கிறது. அவர் சொன்னபடியே நாம் இங்கு வந்தது நல்லதாய்விட்டது.

சீதா: ஒரு மாசத்துக்கு இங்கேயே இருந்துவிடலாம். தினமும் இரண்டு வேளை மலையேறிச் சுவாமி தரிசனம் செய்யவேணும்.

மாதவன்: இப்போ புறப்பட்டுப் புளியம்பட்டிக்குப் போய் நாளைக்குச் சாயங்காலம் வரையில் அங்கு இருந்துவிட்டு வந்துவிடலாம். பிறகு இங்கேயே இருப்போம். எங்கே அந்த ஜட்காக்காரனை இன்னும் காணுமே?

சீதா: மணி என்ன?

மாதவன்: எட்டாகிவிட்டது.

சீதா: அவன் சாப்பிட்டுவிட்டுத்தானே வரவேணும்? இல்லாவிட்டால் நாளைக்குக் காலையிலே புளியம்பட்டிக்குப் போகலாமா? இப்போ இருட்டில் எதற்கு?

மாதவன்: இல்லை சீதா. நாளைக்குக் காலையில் போனல் சாயங்காலம் திரும்ப முடியாது. ஓர் இரவாவது அங்கு தங்கும்படி சொல்லுவார்கள். பிறகு கிருத்திகை தரிசனம் நாளைக்கு நமக்குக் கிடைக்காது போகும்.

சீதா: அந்த ஊர் இங்கிருந்து எவ்வளவு தூரம்?

மாதவன்: பக்கந்தான். எட்டரைக்குப் புறப்பட்டா

லும் குதிரை வண்டியில் போனால் ஒன்பது மணிக்குப் போய் விடலாம்.

சீதா : சரி, எட்டரை மணிக்குள் அவன் வந்துவிட்டால் போகலாம்.

மாதவன் : சீதா, மலையேறும்போது ஒரு பையன் காவடிச் சிந்து பாடினானே, கேட்டாயா ?

சீதா : ஆமாம், ரொம்ப அழகாக இருந்தது. அந்தப் பாட்டு எனக்கு எப்பொழுதுமே பிடிக்கும்.

மாதவன் : எங்கே அதைக் கொஞ்சம் பாடு.

சீதா : நீங்களும் கூடவே பாடவேண்டும்.

(பாடுகிறாள்)

புள்ளிக் கலாப மயிற் பாகன் சக்தி
  புதல்வனான கன யோகன் மலை
போலத் தான் திரண்ட கோலப் பன்னிரண்டு
  வாகன் நல்வி வேகன்
வள்ளிக் கிசைந்த முருகேசன் அண்ணா
  மலைக்கவி ராஜன் மகிழ் நேசன் என்றும்
வாழுங் கழுகுமலை வாவிவளஞ் சொல்லுவேன்
  மாதே கேளிப் போதே
  (இருவரும் சேர்ந்து பாடுகிறார்கள்)
வெள்ளை நாரை கொத்தும் வேளை—தப்பி
  மேற்கொண் டெழுந்து சின வாளை கதி
மிறிப்பாயுந் தோறுங் சிறிச் சாயும் தென்னம்
  பாளை யுடன் தாழை.

[ஜட்காக்காரன் வருகிறான்]

ஜட்காக்காரன் : என்னங்க, புறப்படலாமா ?

சீதா : ஏப்பா, புளியம்பட்டி இங்கிருந்து எத்தனை தூரம் ?

ஜட்காக்காரன்: பக்கந்தாம்மா — அரைமணியிலே அங் கிருக்கலாம்.

சீதா: வழியெல்லாம் தொந்தரவில்லையே?

ஜட்காக்காரன்: அதெல்லாம் ஒன்றுங் கிடையாது. புளியம்பட்டி எனக்குச் சொந்த ஊரு. எந்த ஜாமத் திலே வேணும்னாலும் போவேன், வருவேன்.

மாதவன்: நீ அந்த ஊர்க்காரனா? அப்போ உனக்கு அங்கே எல்லாரையும் தெரியுமா?

ஜட்காக்காரன்: நல்லாத் தெரியும். பட்டணக்கரையா பக்கத்து வீட்டுக்காரர்கூடத் தெரியாமெ இருக்கிற துக்கு? கிராமத்துலே அப்படி முடியுங்களா?

சீதா: இப்பவும் நீ அங்குதான் குடியிருக்கிறாயா?

ஜட்காக்காரன்: போனவருசம் வரையிலும் அங்கு தாம்மா இருந்தேன். மழைதுளி சரியா இல்லாமெ பிளைக்கிறதே கஸ்டமாப் போயிடுச்சு—நிலத்தை நம்பி வாள முடியலே.

சீதா: நீயும் விவசாயம் பண்ணுவாயா?

ஜட்காக்காரன்: மழை இல்லாமெ என்ன விவசாயம் பண்ண முடியும்? நானும் பாத்துட்டுக் கடைசியிலே வாடகைக்கு வண்டியோட்டியாவது பிளைக்கலா முன்னு பழனிக்கு வந்தேன். ஆண்டவன் புண்ணி யத்திலே என்னமோ அரைக்கஞ்சி கிடைக்குது.

மாதவன்: பாவம், விவசாயம் செய்வதை விட்டு விட்டு இப்படி வருவதென்றால் கஷ்டந்தான்.

ஜட்காக்காரன்: வண்டியோட்டறது என்ன சாமி பிளைப்பு? குதிரை ஒரு சீவனை நம்பி நாங்கள் எட் டுப்பேர் பிளைக்கவேணும்.

மாதவன்: சீதா, புறப்படலாமா?

சீதா: இதோ நான் தயார்.
ஜட்காக்காரன்: வாங்கோ சாமி, சீக்கிரமாகப்போக லாம்.

[புறப்படுகிறார்கள்]

திரை

## காட்சி ஆறு

[புளியம்பட்டி. இரவு மணி சுமார் பத்து. ஒரே இருட்டு மாதவனும் சீதாவும் ஜட்காவை விட்டு இறங்கி நிற்கிறார்கள். ஜட்காக்காரன் முன்னாலே நிற்கிறான்.]

ஜட்காக்காரன்: சாமி, இதுக்கு மேலே வண்டி போகாது. ரொம்பச் சின்னச் சந்து. அதனாலே தான் இறங்கிக்கொள்ளச் சொன்னேன்.
சீதா: என்ன, விளக்கு ஒன்றுகூடக் காணோமே?
ஜட்காக்காரன்: பட்டிக்காட்டிலே இப்படித்தாம்மா இருக்கும். வீட்டிலிருக்கிற விளக்கைக்கூட இதுக்குள்ளே அணைச்சுப் போடுவாங்க.
சீதா: வெளியிலே ஒருத்தர் நடமாட்டத்தையும் காண வில்லையே?
ஜட்காக்காரன்: கிராமத்துலே சினிமாவா நாடகமா ஒண்ணுங் கிடையாது. சாப்பிட்டதும் படுத்துத் தூங்க வேண்டியதுதான். காலையிலிருந்து வேலை செய்கிறவங்களுக்குத் தூக்கமும் நல்லா வரும்.
சீதா: மாது, போகலாமா? வீட்டிற்கு வழி தெரியுமல் லவா?
மாதவன்: வழி தெரியும். ஆனால், வளைஞ்சு வளைஞ்சு சந்து சந்தாகப் போகவேணும்.

ஜட்காக்காரன்: பட்டிக்காட்டிலே அப்படித்தாம்மா இருக்கும். நானே உங்களைக் கூட்டிப்போய் விடுவேன்; ஆனால், குதிரை இருட்டிலே தனியா இருந்தா மிரளும். அதற்குத்தான் யோசனை பண்ணறேன்.

மாதவன்: வேண்டாமப்பா - நாங்களே போய்விடுவோம். நீ கவலைப்படாதே. சீதா, இந்தப் பக்கமாக நட.

ஜட்காக்காரன்: சாமி நான் போய்ட்டு வறேன். நிதானமா வழியைப் பார்த்துப் போங்க.

[போகிறான்.]

சீதா: கருகும்மென்று இருக்கிறது. ஒரு விளக்குக் கூடக் காணோம்.

மாதவன்: கிராமமென்றால் இப்படித்தான். வீதியிலேயே சாக்கடையெல்லாம் இருக்கும். பார்த்து நட.

சீதா: டார்ச் விளக்கைக் கொண்டுவராமல் போனோம்.

மாதவன்: பரவாயில்லை. இன்றைக்கு மட்டுந்தானே? நாளைக்குப் பழனிக்குத் திரும்பி விடுவோம்.

[மெதுவாக இருவரும் நடக்கிறார்கள்.]

சீதா: என்ன, இதற்கு மேலே வழியே தெரியவில்லையே?

மாதவன்: இப்படிவா - நான் முன்னால் போகிறேன். இன்னும் மூன்று சந்து திரும்ப வேணும்.

சீதா: ஊரிலே ஒரு சத்தங்காணோம் - ஒரே நிசப்தமாக இருக்கிறது.

மாதவன்: இதோ இந்த மூலையில் திரும்பினால்.........

[அவன் பேச்சு முடியுமுன்பே தடதடவென்று சத்தம்- ஞொய் ஞொய் என்று பயங்கரமாகச் சத்தமிட்டுக்

கொண்டு எருமை மாடு ஓடிவரும் சத்தம். மா......
என்று மாடு கத்துகிறது. சடசடவென்று ஏதோ
வேலிமேல் சாய்வதுபோலக் குழப்பமாகப் பலவித
ஓசை.]

மாதவன்; ஹா, கரும்பூதம் - ஐயோ - பேய் வருதே.

[மாதவன் வீரிட்டு அலறுகிறான். தடாலென்று எதிலோ
மோதிக் கீழே விழுகிறான். பலவகையான சத்தம்
கேட்கிறது]

சீதா: மாது, மாது......

[சீதா பயந்த குரலில் கூவுகிறாள். மாதவன் கண்டபடி
உளறுகிறான் - மற்ற அரவம் அடங்குகிறது]

மாது, தைரியமாக இருங்கள் - ஒன்றும் இல்லை
ஏதோ மாடு மிரண்டு ஓடுகிறது.

மாதவன்: உஸ்......(பெருமூச்சு விடுகிறான்.) சீதா, அப்பப்பா - உஸ்......

[இருட்டிலே அவன் புரண்டு மெதுவாக எழுந்து உட்
காருவது தெரிகிறது.]

சீதா (தைரியமாக): ஒன்றுமில்லை மாது, அது மாடு தான்...இப்போ நன்றாக இருக்கிறதா?

மாதவன்: சீதா, இப்போ எல்லாம் நினைவுக்கு வருகிறது - இந்தச் சந்திலேயேதான்-அநேகமாக இந்த இடத்திற்குப் பக்கத்திலேயே சிறு வயதாக இருக்கும்போது ஒருநாள் இருட்டிலே நான் பட்ட அவஸ்தை...

சீதா: இங்கேயா? சிறுபிள்ளையாக இருக்கும்போதா? என்ன அவஸ்தை?

மாதவன்: அப்பா, அதை நினைத்தால் பயமாக இருக்கிறது; இப்போ எருமை மாடு வந்ததுபோலக்

கன்னங்கரேலென்று ஒரு காளைமாடு பயங்கரமாகச் சத்தம் போட்டுக்கொண்டு வந்தது. இந்தச் சந்திலே இருட்டிலே நான் வந்துகொண்டிருந்தேன் என்னைக் கீழே தள்ளி...

[வேகமாக மூச்சு விடுகிருன். நிறுத்தி நிறுத்திப் பேசுகிருன்.]

சீதா: அந்நேரத்திலே எதற்கு இருட்டிலே வந்தீர்கள்? அதுவும் தனியாக?

மாதவன்: தனியாக வரவில்லை. வீட்டிலே வேலை செய்யவும் என்னைக் கவனித்துக்கொள்ளவும் ஒரு சிறு பெண் இருந்தாள். அந்த வேலைக்காரச் சிறுமி என்னைக் கூட்டி வந்தாள். மாடு மிரண்டு என்னைக் கீழே தள்ளிவிட்டது. மாடு வருவதைப் பார்த்து அந்தப் பெண் என்னைத் தனியாக விட்டுவிட்டு ஓடிவிட்டாள். இருட்டிலே இந்தச் சந்திலே நான் யாரும் துணையில்லாமல் மாட்டிடம் அகப்பட்டேன். நான் பயந்து நடுங்கி அப்படியே மூர்ச்சையாகி விழுந்துவிட்டேன்...உயிர் பிழைத்ததே பெரிதாகப் போய்விட்டது. நல்லவேளை; காயமொன்றும் ஏற்படவில்லை.

சீதா: இதுவரையிலும் இந்த சம்பவத்தை எனக்கு நீங்கள் சொல்லவில்லையே?

மாதவன்: சின்ன வயசிலே ஏற்பட்ட இந்த சம்பவம் எனக்கே இந்த நேரம் வரையிலும் ஞாபகம் இல்லை. இப்போ இந்த இடத்திற்கு இருட்டிலே வந்ததும் அந்த மாடு ஓடிவந்து சத்தம் போட்டதும் சட்டென்று எல்லாம் நினைவுக்கு வந்துவிட்டது. மனத்

திலே அடியிலிருந்து எனக்கே தெரியாமல் வெளி யிலே வந்து விட்டது...

சீதா: மாது, இனி உங்களுக்கு ஒரு குறையும் இல்லை. அந்த மனமருத்துவர் இதைத்தான் சொன்னார். சிறு வயசிலே ஏற்பட்ட இந்தப் பயங்கர அதிர்ச்சி உங்க ளுக்கே தெரிந்து போனால் மனக்கோளாறெல்லாம் உடனே நீங்கிவிடுமாம்.

மாதவன்: ஆமாம், எனக்கே இப்போ ஏதோ பாரம் நீங்கினதுபோல இருக்கிறது.

சீதா: இந்த ஊருக்கு இருட்டிலே வந்தது நல்லதா யிற்று.

மாதவன்: எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. எப்படி அந்தச் சம்பவம் திடீரென்று ஞாபகத்திற்கு வந்ததோ தெரியவில்லை.

சீதா: அந்த வேலைக்காரப் பெண் உங்களைத் தனியாக விட்டுவிட்டு ஓடினதாலே உங்களுக்கு எப்படியோ அந்தப் பெண்ணிடம் ஏற்பட்ட வெறுப்பு உங்கள் அக்காள் மேலே திரும்பியிருக்கிறது; அப்படித் தானே?

மாதவன்: சீதா, அது உண்மையாகத்தான் தெரி கிறது. அக்காள் வீட்டுக்குப் போய் அவளைச் சமா தானம் செய்யவேணும்.

சீதா: மரகதம் ரொம்பக் கோபத்தோடு போயிருக் கிறாள். அன்றைக்கு நடந்த சம்பவம்...

மாதவன்: இனி அப்படி ஒன்றுமே நடக்காது, சீதா. அந்தப் பிரமை தீர்ந்தது. அக்காளுக்குக் காசுமாலை பழனியிலேயே வாங்கலாமா?

சீதா: முதலில் பழனி முருகனுக்கு மலர்மாலை வாங்கிப்

*போடுங்கள். அவர் அருள்தானே எல்லாம்... எனக்கு வாழ்வளித்தவர் அந்தப் பெருமான்தான்...*

[இருவரும் மகிழ்ச்சியோடும் பக்திப் பரவசத்தோடும் இருட்டிலே நின்று பாடுகிறார்கள்.]

(பாட்டு)

கந்தா கடம்பா மயூரா — அருள்
கந்தா கடம்பா மயூரா

1. குமரா குழகா குஞ்சரி நாயகா
குறை தீர் முருகேசா—கூர்வேலா (கந்தா)

2. காசினியோர் புகழ் கலியுக வரதா
கதிரோனெனு மழகா—கூர்வேலா (கந்தா)

3. திருமால் மருகா தேவசேனபதி
சிவ ஷண்முக நாதா— கூர்வேலா (கந்தா)

4. பார்வதி பாலா பரம தயாளா
பழனிப் பதி வாழ்வே—கூர்வேலா (கந்தா)

5. சூரசங்காரா தொன்மறை முதலே
தொழுதேன் அருள்வாயே—கூர்வேலா (கந்தா)

திரை

---